# புதிய சமுதாயம்

சென்னை மாநில முதலமைச்சர்
திரு. கு. காமராஜ்

விற்பனை உரிமை



தொகுப்பு ;

**மு. நமசிவாயம்**

முதற் பதிப்பு நவம்பர் '60
பதிப்புரிமையுடையது.

விலை ரூபாய் 1-00

அச்சிட்டோர் :
ஜெயராஜ் பிரிண்டர்ஸ்
புரசைவாக்கம் நெடுஞ்சாலை
சென்னை-7.

வெளியிடுவோர் ;

**மனோன்மணி பதிப்பகம்**

**சென்னை-6.**

# பதிப்புரை

சென்னை மாநில முதலமைச்சர் திரு. கு. காமராஜ் அவர்கள் சிறந்ததொரு கர்மவீரர். சுதந்திர இந்தியாவில் சமதர்ம சமுதாயத்தை—புதிய சமுதாயத்தை உருவாக்கும் பெரும் பணியில் முழு மூச்சுடன் ஈடுபட்டு உழைத்து வருபவர். அந்த லட்சியத்தை நிறைவேற்றுவதில் அவருக்குள்ள துடி துடிப்பை உள்ளம் திறந்தும் செயலிலும் காட்டி வருகிறார்.

காமராஜ் ஆட்சியில் அமைதி நிலவுகிறது. நிலையான, உறுதியான சர்க்கார் இருக்கிறது என்று எல்லோரும் ஒரு சேரப் பாராட்டுகின்றனர். இதற்குக் காரணம் என்ன? "அமைதியே ஆக்க வேலைக்கு ஆதாரம்" என்ற கருத்து அவருடைய உள்ளத்தில் ஆழப் பதிந்திருக்கிறது. அவரது இதயம், எண்ணம், பேச்சு, நடத்தை, ஆட்சி முறை, கட்சி நடவடிக்கை, பிற கட்சிகளுடன் தொடர்பு ஆகிய அனைத்திலும் இந்த அமைதி காக்கும் பெரு நோக்கு தீவிரமாக வெளிப்படுகிறது.

நூல் வடிவத்துக்கு ஏற்ற முறையில் கு. காமராஜ் அவர்களின் உரைகளைத் தொகுத்தவர் "நவ இந்தியா" நாளிதழ் நிருபர் திரு. மு. நமசிவாயம்.

பல்வேறு அலுவல்களுக்கிடையே திரு. காமராஜ் அவர்கள் கையெழுத்துப் பிரதியைப் பார்வையிட்டு ஒப்புதல் தந்தமைக்கு எங்கள் நன்றி.

—பதிப்பகத்தார்.

**சென்னை மாநில**
**முதலமைச்சரின்**
**பிற நூல்கள்**

நாமார்க்கும் குடியல்லோம்
சொல்லும் செயலும்
சுதந்திரமும் முன்னேற்றமும்

# புதிய சமுதாயம்

நம்முடைய தேசப் பிதாவும் வழிகாட்டியுமான மகான் காந்திஜியின் வழியில் நாம் பாடுபட்டு சுதந்திர மடைந்து விட்டோம். சுதந்திர சர்க்கார் கடந்த பதினான்கு ஆண்டுகளாகச் செயல்பட்டு வருகிறது.

சுதந்திரத்தைப் பெற்றுவிட்டோம், சுதந்திர ஆட்சி நடக்கிறது, சுகம் வந்துவிட்டது என்றுதான், சுதந்திரம் வந்ததும் மக்கள் நினைத்து மகிழ்ந்தார்கள். இதில் தப்பு ஒன்றுமில்லை. ஆனால், சுதந்திரம் வந்ததும் சுக வாழ்வு அப்படியே வந்துவிட்டதா? ஏதோ சிலருக்கு, சில சூழ்நிலையில் உள்ளவர்களுக்கு வந்திருக்கலாம். ஆனால், எல்லோருக்கும் — குறிப்பாக நாட்டில் உள்ள கோடானு கோடி ஏழை மக்களுக்கு வாழ்வு வந்ததா, வறுமை நீங்கி விட்டதா என்று கேட்டால் 'இல்லை' என்றுதான் பதில் சொல்லவேண்டியிருக்கிறது. இதற்குக் காரணம் என்ன?

இரண்டு நூற்றாண்டுகளாக அன்னிய ஆட்சியில் அடிமைப் பட்டு இருந்த நேரத்தில், உலகத்தில் ஏற்பட்ட பல்வேறு மாறுதல்களோடு — தொழில், விஞ்ஞான, கருத்துப் புரட்சிகளோடு — நாமும் நமது நாடும் ஒட்டி முன்னேறவில்லை. மாறுதலுக்கு உட்படாமல் பின்தங்கி விட்டோம். இதனால்தான் சுதந்திரம் வந்தும், உடனே சுக வாழ்வு கிடைக்கவில்லை.

சுதந்திரம், சுக வாழ்வுக்கான யாத்திரையின் ஒரு கட்டம் - முதல் கட்டம்தான். நாட்டில் உள்ள பின் தங்கிய நிலைமையை - சூழ்நிலைகளை மாற்ற வேண்டும்.

அறியாமையை அகற்றி தொழில் பெருக்கத்துக்கும் வேலை வாய்ப்புக்கும் ஏற்ற வழி காண வேண்டும். இயற்கை சக்திகளையும் மனித சக்தியையும் அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தி சுபிட்சத்துக்கு வழி கண்டு பிடிக்க வேண்டும். இந்த மகத்தான வேலைதான் சுக வாழ்வுக்கான யாத்திரையின் இரண்டாவது கட்டம். இந்தக் கட்டத்தில்தான் நாம் இன்று இருக்கிறோம்.

சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், சுதந்திரம் சுயராஜ்யம் என்பதற்கான சூழ்நிலையையும் தன்னம்பிக்கையையும் எழுச்சியையும் வீர உணர்ச்சியையும் அன்று, அதாவது 1947-க்கு முன் - எப்படி ஏற்படுத்தினோமோ அதைப் போலவே, ஏன், அதையும் விட மிகவும் வேகமாகவும் நல்ல முறையிலும் சுக வாழ்வுக்கான வழிவகைகளைக் காண, நாம் தனிக் கவனம் செலுத்தியாக வேண்டும்.

**எது புதிய சமுதாயம்?**

சுதந்திர அரசாங்கத்தால் நாட்டில் "புதிய சமுதாயம்" உருவாக்கப்பட்டு வருகிறது. புதிய சமுதாயம் என்றால் என்ன? தன்னைத்தானே தன்னம்பிக்கையோடு ஆண்டு கொள்ளும் சக்தி படைத்தது அது. தனக்குரிய தேவைகளைத் தானே பூர்த்தி செய்து கொள்ள வல்லது. எத்தகைய ஏற்றத் தாழ்வும் ஏற்பட முடியாத சூழ்நிலையில் உள்ளதே நாம் காண விரும்பும் "புதிய சமுதாயம்". அது எப்படிப் பட்டது? கவலையற்ற வாழ்வு – பிறரைக் கவலைக்குள்ளாக்காத, நம்மைப் போலவே மற்றவர்கள் வாழ்கிறார்கள், மற்றவர்களைப் போலவே நாமும் வாழ்கிறோம் என்ற திருப்தி படைத்தது "புதிய சமுதாயம்"

**இத்தகைய கவலையற்ற சமுதாயத்தை—புதிய சமுதாயத்தைப் படைக்க சட்டம் போட்டு முடியாது.**

பொருளாதார வளர்ச்சித் திட்டங்கள் மட்டும் போதாது. மக்களிடையே மகத்தான மனமாறுதல்—மனப்புரட்சி ஏற்பட்டாக வேண்டும்.

## திட்ட கமிஷன் தோற்றம்

இத்தகைய சமுதாயத்தை உருவாக்குவதற்காக, சுதந்திரம் வருவதற்கும் முன்பாகவே, நாட்டு விடுதலை இயக்கமான காங்கிரஸில் "திட்ட கமிஷன்" அமைத்தனர்.

சுதந்திரம் வருவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே காங்கிரஸ் கட்சியில் "திட்ட கமிஷன்" என்ற ஒரு அங்கம், "புதிய சமுதாய" அமைப்பு குறித்த ஆக்க வேலைகளுக்கான திட்டங்களை வகுத்து, அடிக்கடி அதனை ஆராய்ந்து வந்தபடி இருந்தது.

சுதந்திரம் வந்த பிறகுதான் திடீரென்று திட்டங்கள் போட முன் வந்துவிட்டதாக யாரும் எண்ணிவிடக் கூடாது. இது, விடுதலைப் போராட்ட காலத்தில் இருந்தே திட்டமிட்ட வேலைதான் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுகிறேன்.

## மன மாறுதலை ஏற்படுத்த........

கடந்த பத்தாண்டு காலமாக இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் அமுலாகி வருகின்றன. அடுத்து மூன்றாவது திட்டம் உருவாகியுள்ளது. இந்த நிலையில் நாட்டு மக்களும் சமுதாயத் திட்ட ஊழியர்களும் பல்வேறு கட்சிகளும் திட்டங்களைப் புரிந்து அதனை நிறைவேற்றிப் புதிய சமுதாய அமைப்பில் ஒத்துழைக்க வேண்டியது பெரிதும் அவசியமாகிறது.

மக்களிடம் — குறிப்பாக — ஏழைகள், கிராமப்புற மக்களிடம் மனமாறுதல் ஏற்படுவது முக்கியம். கிராமப் புறங்களில் நல் வாழ்வும், நாகரிக வசதிகளும் ஏற்படுத்த

சமுதாய நல அபிவிருத்தித் திட்டம் முதன்மையாக உள்ளது.

சமுதாய நல அபிவிருத்தித் திட்டத்தை மக்கள் சரிவரப் புரிந்து கொள்ளவும் அதில் மனதார ஈடுபட்டுப் பாடுபடவும் வேலை செய்தாக வேண்டும். இதில் பொது நலத் தொண்டர்களும் இதற்காகவே உள்ள சர்க்கார் ஊழியர்களும் முழுக்கவனம் செலுத்த வேண்டுகிறேன்.

சமுதாய அபிவிருத்திப் பிரதேசங்களில் நடந்து வரும் வேலைகள் பற்றி எவ்வளவோ குறைகள் கூறப்படுகின்றன. அவைகளில் பல நியாயமானவையாகவும் இருக்கலாம். ஆனால், இந்தியாவில் சமுதாய அபிவிருத்தித் திட்ட வேலைதான் நாம் மேற்கொண்டுள்ள புரட்சிகரமான வேலை என்பது என்னவோ நிச்சயமான உண்மை. இதுவரை கிடைத்துள்ள பலன்களும் மிகவும் ஆச்சரியப் படத்தக்க முறையில் அமைந்துள்ளன. நான் இவ்வாறு சொல்லும் போது, சில இடங்களில் ஓரளவு தான் வெற்றி கண்டிருக்கிறோம். சிலவிடங்களில் தோல்வி அடைந்திருக்கிறோம், செய்ய உத்தேசித்துள்ளவைகளைச் செய்ய முடியாமல் ஆகியிருக்கிறது என்பதை முழுக்க உணர்ந்துதான் இதைத் தெரிவிக்கிறேன். ஏழரை ஆண்டுகளுக்கு முன்தான் நாம் இந்தத் திட்டத்தைத் ஆரம்பித்தோம். இப்போது அது கிராமாந்திர இந்தியாவில் நெருங்கிப்பின்னி வியாபித்துவிட்ட திட்டமாக இருக்கிறது. பல்லாயிரக் கணக்கான கிராமங்களுக்கு அது வியாபித்திருக்கிறது என்பதால் மாத்திரம் இப்படிச் சொல்லவில்லை; ஆனால், அது ஏற்படுத்தியுள்ள புதிய ஜீவனைக் கருதிதான் இவ்வாறு சொல்கிறேன். முன்பு தேக்கமும் உயிரற்ற வாழ்க்கையும் இருந்த இடங்களில் இப்போது ஜீவத்துடிப்பு நடமிடுவதை நாம் பார்க்கிறோம். உண்மையில் இந்தியாவின் ஆழ்ந்த அடிப்

படையிலிருந்து புதிய சக்திகளை நாம் எழுப்பிவிட்டிருக்கிறோம்; அவைகளை நாம் எவ்வளவு தூரம் சரியான பாதையில் திருப்பிவிட முடியும் என்பதுதான் இப்போதுள்ள பிரச்னை.

## ஜீவ சக்தியின் பிறப்பிடம்

நாம் ஆண்களையும் பெண்களையும் சரிவரப் பயிற்சியளித்து உருவாக்கி வருகிறோம் என்று தான் சொல்ல வேண்டும். இவ்வாறு பயிற்சி பெற்ற, தன்னம்பிக்கையுள்ள, கூட்டுறவு ரீதியில் வேலை செய்கிற மக்களிடமிருந்துதான் எல்லாம் உதயமாக வேண்டும். தனிப்பட்டவர்களை நாம் பயில்விக்க வேண்டும். அவர்களுக்கு சமூக வாழ்க்கை உணர்ச்சியை உண்டுபண்ண வேண்டும். தன்னம்பிக்கையுள்ள கூட்டுறவு முயற்சி மூலம்தான் நம் மக்கள் நன்றாகச் செழித்து வளர்ந்து முன்னேற முடியும். நான் சர்க்காரில் ஓர் அங்கத்தினன்; இவ்வாறு ஒரு நவ இந்தியாவை நிர்மாணிப்பதில் சர்க்கார் பெரும் பங்கு கொண்டு வேலை செய்ய வேண்டுமென்று நான் கருதுகிறேன். ஆனால் உண்மையான ஜீவ சக்தி மக்களிடமிருந்துதான் வரவேண்டுமே தவிர, சர்க்காரிடமிருந்து அல்ல.

நாம் எதை இலட்சியமாகக் கொண்டுள்ளோம்? ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பள்ளிக்கூடம், ஒரு பஞ்சாயத்து, பலகாரிய கூட்டுறவுச் சங்கம் ஆகியவை ஏற்படும்படி செய்ய வேண்டும். அதன் மூலம் நமது அரசியல், பொருளாதார, கலாசார அபிவிருத்திக்கு அஸ்திவாரமிடுகிறோம். விரிவான இந்திய ஜனநாயக அமைப்பில் சுய ஆட்சி புரிகிற ஜனநாயக அங்கங்களை உருவாக்குகிறோம்.

**உடனடி லட்சியங்கள்**

நமது உடனடி இலட்சியங்கள் எவை? விவசாய உற்பத்தியில் கணிசமான அபிவிருத்தி காணுவது; முக்கியமாக உணவுத் தானியங்களில் அதிக உற்பத்தி காணுவதும், அதையொட்டி கிராம சிறு தொழில்கள் அபிவிருத்தியும் இன்று ஜீவ முக்கியத்துவமுள்ள விஷயங்களாம். சமீபத்தில் நாம் தீர்க்க வேண்டியிருக்கிற மிக முக்கியமான பிரச்னை அதுதான். மற்றவை யெல்லாம் அதைப் பொறுத்தே இருக்கின்றன. தொழில்கள் விவசாய வளர்ச்சியைப் பொறுத்தே பெருகமுடியும். கிராமங்களில் ஏற்பட வேண்டுமென்று நாம் விரும்புகிற வசதிகளெல்லாம் விவசாய உற்பத்தி எவ்வளவுதூரம் முன்னேறுகிறது என்பதைப் பொறுத்தே அமையும்.

## 2. சமுதாய நல அபிவிருத்தித் திட்டம்

இந்தியாவில் சமுதாய நல அபிவிருத்தி வேலை ஒரு முக்கிய கட்டத்துக்கு வந்திருக்கிறது. எதிர்கால வெற்றியை ஏதோ லேசாக மனதில் எழுகிற உணர்ச்சிகளைக் கொண்டே மதிப்பிட்டுவிடலாமா? ஆனால், உண்மையில் உணவுத்தானிய உற்பத்தி எந்த அளவுக்கு ஏற்பட்டிருக்கிறது என்பதைப் பொறுத்தே அது மதிப்பிடப்படும். எனவே, ஒவ்வொரு சமுதாய அபிவிருத்தித் தொகுதியும் இதைக் கவனத்தில் வைத்து அந்த லட்சியம் ஈடேற இடைவிடாமல் உழைக்கவேண்டும். ஒவ்வொரு தொகுதியும் கிராமம் வரை வியாபிக்க வேண்டும்; ஒவ்வொரு விவசாயியின் குடும்பம் வரை எட்டவேண்டும்; அப்படியானால்தான் இந்த முயற்சி மிக விரிந்த அடிப்படையில் தனிப்பட்ட ஒவ்வொருவரும் ஈடுபட்டு வேலை செய்கிற முயற்சியாக இருக்கும்.

**மக்கள் இயக்கமாக......**

சமுதாய அபிவிருத்தி இயக்கம் படிப்படியாக மக்களுடைய இயக்கமாக மாறி அவர்கள் பொறுப்பில் நடக்க வேண்டும். சர்க்காரின் உதவியும் அவர்கள் பங்கெடுப்பதும் அவசியம்தான்; அவை மேலும் நீடிக்கும். ஆனால், இனி அது மக்களின் இயக்கமாக மாறி வரவேண்டும்; மேலே இருந்து நடத்தப்படும் ஒரு விஷயமாக அது ஆகக்கூடாது.

மக்களை விழிப்புப் பெறச் செய்ய வேண்டுமானால் பெண்களைத்தான் முதலில் விழிப்புறச் செய்யவேண்டும்.

பெண்கள் விழிப்புப் பெற்று, நடவடிக்கை எடுக்கத் துவங்கி விட்டால் குடும்பமும் முன்னேறும், கிராமங்கள் முன்னேறும்; தேசமே முன்னேறும்.; பெண்கள் மூலம் குழந்தைகள் இதில் ஈடுபடுகிறார்கள். அவர்களுக்கு இன்னும் நல்ல சுகாதார வாழ்க்கை, சிறந்த பயிற்சி ஆகியவைகளின் பலன்கள் கிடைக்கும். எனவே, நாம் இன்றைய சிறுவர்கள் மூலம் எதிர்கால இந்தியாவை உருவாக்குகிறோம்.

சமுதாயநலத் திட்டத்தின் கீழ் நாம் செய்து கொண்டிருக்கும் வேலைகளில், ஹரிஜனங்களுக்காக வேலை செய்வது முக்கியமானதொன்றாகும். ஹரிஜனங்கள் என்று அவர்களைத் தனியாக பிரிக்க வேண்டிய அவசியமில்லை. "ஹரிஜனங்களுக்கு மாத்திரமே சர்க்கார் எல்லா வேலையும் செய்கிறார்கள்" என்று சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் ஹரிஜனங்களோ, "சர்க்கார் எங்களுக்கு ஒன்றுமே செய்யவில்லை" என்று சொல்லுகிறார்கள்.

## நாடு முன்னேற... ..

ஹரிஜனங்கள் என்று சொல்லப்படுகிறவர்கள் தான் சமுதாயத்தில் மிகவும் பலஹீனமான நிலையில் இருக்கிறார்கள். மேலும் ஹரிஜனங்களில் ஏறத்தாழ எல்லோருமே ஏழைகளாகத்தானே இருக்கிறார்கள்? அதனால்தான் அவர்களைக் கவனிப்பதில் கொஞ்சம் அதிக சிரத்தைக் காட்ட வேண்டியுள்ளது. நம் நாட்டிலுள்ள கோடிக் கணக்கான ஏழைகளை முன்னேற்றினால்தான், அவர்கள் முன்னேற்றம் அடைய வழி செய்வதின் மூலந்தான் நம் நாட்டின் நிலைமையைச் சீர்திருத்த முடியும்; அப்பொழுது தான் நம் நாடும் முன்னேறும். அந்த அடிப்படையிலே இன்று பல திட்டங்கள் வகுக்கப் பட்டிருக்கின்றன. அந்தத் திட்டங்களை நிறைவேற்றுவதில் எவ்வளவோ

சிரமங்கள் இருக்கின்றன. அப்படி அவைகள் நிறைவேற்றப்பட்ட போதிலும், எல்லோருக்கும் திருப்தி அளிக்க, எல்லோரையும் திருப்தி செய்ய முடியவில்லை.

### சமுதாயநலத்திட்ட ஊழியர்களுக்கு...

கிராமங்களுக்குச் சென்றால் தெரியும், கிராமங்களின் தேவை ஏராளமாக இருக்கிறதென்று. அப்படி கிராமங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு, அவைகளை நிறைவேற்றுவதற்கு நமக்கு இருக்கும் பணமோ கொஞ்சம். ஆக, குறைந்த பணத்தை வைத்துக்கொண்டு கிராம மக்களின் அதிகமான தேவைகளைப் பூர்த்தி செய்யும் பொறுப்பை நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். அரசாங்கம உத்தரவு போடலாம். ஆனால் அவைகளை நிறைவேற்றுவது நீங்கள் (சமுதாய நலத் திட்ட ஊழியர்கள் தானே !

நாங்கள் கிராமங்களுக்கு போகும்போது அங்கு கிணறுகள் வேண்டும், ஆஸ்பத்திரிகள் வேண்டும், ரோடுகள் வேண்டுமென்றெல்லாம் கேட்கிறார்கள். வேண்டியதைப் பார்த்துச் செய்கிறோம் என்று சொல்லிவிட்டு வருகிறோம். வேண்டியதைக் கூடிய மட்டும் செய்கிறோம். ஆனால் நீங்களோ திரும்பத் திரும்பத் அங்கு போக வேண்டியிருப்பதால், அவர்களின் குறைகளை உடனடியாக நிவர்த்திக்கவும் முடியாமல் அவர்களுக்கு பதில் சொல்லவும் முடியாமல் திண்டாடுகிறீர்கள். அவ்வளவு கஷ்டங்களிடையே நீங்கள் வேலை செய்ய வேண்டியிருக்கிறது.

### நடப்பதை நாடறியச் செய்ய வேண்டும்

இருந்த போதிலும் நாம் செய்கின்ற வேலைகளை மக்களிடம் எடுத்துச் சொல்லவேண்டியது மிகவும் அவசியமாகும். செய்தி இலாகா மூலம், நம் தேசத்தின் அமைப்பு, நமது பொருளாதார நிலை, நமக்கு வரக்கூடிய வருவாய்,

அவ்வருவாயைக்கொண்டு நாம் எவ்வளவு தூரம் காரியங்கள் செய்ய முடியும் என்பவைகளைப் பற்றியெல்லாம் நாம் மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியது மிகவும் அவசியம். அதை நாம் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

பத்திரிகைகளில் அரைகுறை சமாசாரங்கள் வருகின்றன. அதைப் படித்து விட்டு கிராம மக்கள் நம்மைக் கேள்வி கேட்கிறார்கள். நாங்கள் கிராமங்களுக்குப் போனால் பிரசங்கம் செய்துவிட்டு திரும்பி விடுகிறோம். நாங்களும் அங்கேயே இருந்தால் எங்களையும் எப்போதும் கேட்டுக் கொண்டிருப்பார்கள். நீங்கள் அங்கேயே இருக்கிறீர்கள். உங்களைத்தான் ''அது என்ன வாயிற்று'', '' இது என்னவாயிற்று'' என்றெல்லாம் எப்போதும் கேட்டுக் கொண்டிருப்பார்கள். ஆகவே, முதன் முதலாக நீங்கள் விஷயங்களை நன்கு படித்து அறிந்துகொள்ள வேண்டும். அப்படியானால்தான் அவர்களிடம் அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு எல்லாம் திருப்திகரமான பதில் அளிக்க முடியும். பொதுவாக நம் கிராம மக்கள், விஷயம் தெரிந்தவர்கள்.

அவர்கள் மிகவும் நல்லவர்கள். அவர்களுக்கு விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வம் இருக்கிறது, விஷயங்களைப் புரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வம் அவர்களுக்கு நிறைய இருக்கிறது. ஆகவே, நாம் செய்யும் காரியங்களை நன்கு விளம்பரப் படுத்த வேண்டும். நாம் செய்யக்கூடிய காரியங்கள் அவர்களுக்குத் தெரிய வேண்டாமா?

ஹரிஜனங்களின் காரியங்களைக் கவனிக்க ஹரிஜன நல இலாகா இருக்கிறது. உண்மைதான். ஆனால் ஒரு ஜில்லா பூராவிற்கும் ஒரு அதிகாரி இருந்தால் போதுமா? போதாது. அவர்கள் நன்கு வேலை செய்து வருகிறார்கள்.

ஆனால் மக்களிடம் இன்னும் அதிக தொடர்பு கொள்ள வேண்டும். அவர்களுக்கு அதற்குள்ள வாய்ப்பு மிகவும் குறைவாக இருப்பதால், அந்த வேலையை நீங்கள் எடுத்துச் செய்யவேண்டுமென்று ஆசைப்படுகிறேன். ஆகவே, ஹரிஜனங்களுக்கு வேண்டிய காரியங்களை செய்து கொடுக்க முடியுமா, அது எப்படி முடியும் என்பது பற்றி ஆலோசிக்க வேண்டும். நமது வருவாய்க்கு தக்கபடி இன்னின்ன காரியங்கள் செய்யப்படுகின்றன என்று அவர்களிடம் நீங்கள் எடுத்துச் சொல்ல வேண்டும்.

### நாட்டின் ஒற்றுமையில் கவனம்

அதோடு, இந்த நாட்டின் ஒற்றுமையையும் நீங்கள் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். சில கட்சிகளுக்கு விரோதமாக நாம் போவதாக யாரும் நினைக்கவேண்டாம். இதில், கட்சி வித்தியாசத்திற்கு இடமில்லை. இந்த நாடு ஒன்றாக இருக்கவேண்டியது அவசியம். இந்த நாட்டின் பொருளாதார வளப்பத்திற்கு ஒற்றுமையாக நாம் இருக்க வேண்டியது அவசியம். அதோடு இயற்கை அமைப்புகளை, இயற்கை சக்திகளை நாம் நன்கு பயன் படுத்திக்கொள்ள வேண்டும். அதை முதலில் நீங்கள் உணர வேண்டும். பின்னர், அதை மக்கள் உணரும்படிச் செய்யவும் வேண்டும்.

பணத்தை மாத்திரம் கொண்டு நாம் பெரிய பெரிய காரியங்களைச் சாதித்துவிட முடியாது. மக்கள் மனதில் ஒரு மாற்றம் ஏற்பட வேண்டும். நம் நாட்டின் நலனிற்காக நாம் வேலை செய்து வருகிறோம். நாம் செய்யக்கூடிய நல்ல திட்ட வேலைகள் வெற்றிகரமாக நடப்பதின் மூலந் தான் நம் நாடு சுபிட்சம் அடைய முடியும் என்பதை மக்கள் உணரும்படிச் செய்ய வேண்டும். முதலில் நாம் அதை உணர வேண்டும். நமக்கு அதில் உற்சாகம் இல்லாவிட்டால், அவர்களிடம் போய் நாம் அதைப்பற்றி

எப்படிச் சொல்ல முடியும்? ஆகவே, நீங்கள் அதில் மிகுந்த அக்கறையும், உற்சாகமும் எடுக்கவேண்டும்.

சாதாரண ஜனங்களிடம் நாம் பழகும்போது அவர்கள் நம்மைப் பற்றி எப்படி நினைக்கிறார்கள்? "ஏதோ சர்க்கார் அதிகாரிகள் வருகிறார்கள், போகிறார்கள். நம்மைப் பற்றி அவர்கள் ஏன் சிரத்தை எடுக்கப் போகிறார்கள்," என்று மக்கள் நினைப்பதற்கு நாம் இடம் கொடுக்கக்கூடாது. நாம் போகும்போது நம்கூட பியூன் வரவேண்டும், சாமான் தூக்க நம்முடன் ஆள் வரவேண்டும் என்ற மனப்பான்மை நமக்கு இருக்கக்கூடாது. நாம் கிராம மக்களுடன், அவர்களில் ஒருவராகப் பழக வேண்டும். நாம் பரஸ்பரம் அவர்களுடன் ஒருவராகப் பழகி, நாமும் அவர்களும் ஒன்று என்ற எண்ணம் ஏற்பட்டால் தான், நாம் நம் காரியங்களைச் சுலபமாகச் செய்ய முடியும். அப்பொழுதுதான் நாம் சொல்லும் வார்த்தைக்கு அவர்களிடம் மதிப்பு இருக்கும். அப்பொழுதுதான் நாம் சொல்வதை அவர்கள் நம்புவார்கள். ஆகவே, அதற்கு நாம் நம்மைத்தானே பயிற்சி செய்துகொள்ள வேண்டும். நாம் செய்யக்கூடிய காரியங்களில் நம்பிக்கையும், உணர்ச்சியும் இருந்தால்தான் நாம் செய்யும் காரியங்களுக்கு நல்ல பலன் கிடைக்கும். அப்படிச் செய்வதின் மூலந்தான், சர்க்கார் செய்யும் காரியங்களைப் பற்றி அவர்கள் தெரிந்துகொள்ள முடியும்.

## காலத்தில் செய்து களிப்பூட்டுவோம்

சர்க்கார் செய்யும் காரியங்களைப் பற்றிய நல்லெண்ணமோ அல்லது தப்பெண்ணமோ நீங்கள் செய்யும் காரியங்களைப் பொறுத்திருக்கிறது. நாம் செய்திருக்கும் சாதனைகளை மக்களின் மனதில் நன்கு பதியும்படி செய்ய வேண்டும். அந்தப் பொறுப்பு உங்களுக்கு இருக்கிறது. ஆகவே, நல்ல முறையில் நீங்கள் நடந்துகொள்ள பழகிக்

கொள்ள வேண்டும். எங்களுக்கு சம்பளம் 50, 60 ரூபாய் தான் கொடுக்கிறீர்கள், அது காணவில்லை என்று நீங்கள் கூறலாம். வாஸ்தவந்தான், காணவில்லை. கூடுதல் கொடுக்க, நம் நிதி வசதி இடங்கொடுக்க வேண்டாமா? உங்களுக்கு அதிக சம்பளம் கொடுக்க வேண்டாமென்று நான் சொல்லவில்லை. நமக்கு வழி அவ்வளவுதான் இருக்கிறது. அதற்கு மேல் கொடுக்கச் சக்தி இல்லை. ஆகவே, சம்பளத்தைப் பற்றிய எண்ணம் நம் மனதில் புகாமல் நாம் நம் தேசத்தின் நலனில் கவனத்தைச் செலுத்த வேண்டும்.

கூட்டங்கள் கூட்டிப்பேசுவதை விட, தனித்தனியாக வீடுகளுக்குப் போய் அவரவர்களின் குறைகளை அறிந்து அவைகளைப் போக்க முயற்சி எடுக்கவேண்டும். கிராமங்களில் ஆஸ்பத்திரிகள் வேண்டும், கிணறுகள் வேண்டும், பள்ளிக்கூடங்கள் வேண்டும், ரோடு வேண்டுமென்றெல்லாம் கேட்கிறார்கள். அவைகளைச் செய்துகொடுக்க நான்கு அல்லது ஐந்து மாதங்கள் ஆகின்றன. அவர்களும் சொல்லிச் சொல்லி மறந்து விடுகிறார்கள். அவர்கள் அதைப்பற்றி மறந்து போனவுடன், நாம் அவற்றைச் செய்து கொடுக்கிறோம். காலங்கடத்திச் செய்வதனால், அவர்களின் சந்தோஷமும் குறைந்துவிடுகிறது. ஆகவே எவ்வளவு விரைவாக காரியங்களைச் செய்து கொடுக்க முடியுமோ அவ்வளவு விரைவாக காரியங்களைச் செய்துகொடுக்க நாம் முயற்சி எடுக்கவேண்டும். அப்படிக் காரியங்களை விரைவாகச் செய்வதில் என்னென்ன தடங்கல்கள் இருக்கின்றன, என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்பதைப் பற்றி ஆலோசித்து அவைகளை நீக்குவதற்கும் நாம் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும்.

சர்க்காரின் ஓர் இலாகா செய்வது இன்னொரு இலாகாவுக்குப் புரியாமல் இருக்கிறது. ஆகவே இதை நீக்க

என்ன செய்யலாம் என்பதைப் பற்றி யோசிக்கவேண்டும். அப்படி யோசித்து, அதன் பேரில் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டும். தீர்க்கமாக ஆலோசனை செய்து எந்தெந்த முறைகளைக் கையாண்டால், மக்களுக்கு நன்மை கிடைக்கும் என்று ஆலோசித்து, திட்டம் வகுத்து அதை நல்ல முறையில் நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதற்கு மக்களது ஒத்துழைப்பும் ஆலோசனையும் மிகவும் அவசியம்.

**விளம்பரம் எதற்காக?**

சர்க்கார் செய்து வருகின்ற சிறந்த வேலைகளைப் பற்றி மற்றவர்களுக்குத் தெரியப்படுத்த வேண்டியது அவசியம். இதற்கு வேண்டிய, போதிய விளம்பரம் செய்யப்பட வேண்டும்.

விளம்பரம் என்ருல், ஏதோ ஒரு தப்பான கருத்து ஏற்பட்டுவிட்டது. அரசாங்கத்துனுடைய கொள்கைகளை மக்களுடைய மனதில் புகுத்துகிருேம் என்ற ஒரு தப்பான கருத்து ஏற்பட்டுவிட்டது. அரசாங்கம் வேலை செய்வதை விட்டுவிட்டு ஊருக்கெல்லாம விளம்பரம் செய்ய வந்திருக்கிருர்கள் என்ற தப்பான கருத்து பரவிக் கொண்டு வருகிறது. விளம்பரம் செய்வது தப்பல்ல என்று நாளடைவில் தெரியும். அரசாங்கம் செய்திருக்கும் நல்ல வேலைகளை எல்லோருக்கும் தெரியப்படுத்துவதற்காக அரசாங்கத்தில் விளம்பர இலாகா இருக்கிறது என்பதை மற்றவர்களும் நாளடைவில் உணர்ந்து கொள்வார்கள்.

அரசாங்கம் செய்துவரும் நல்ல வேலைகளையோ அல்லது வேறு யார் செய்யும் நல்ல வேலைகளையோ மக்களுடைய மனதிலே திரித்துச் சொன்னுல்கூட மக்கள் உண்மையைப் புரிந்து கொள்ளாமல் இல்லை.

நன்ருகப் புரிந்து கொண்டிருக்கிருர்கள். சுலபமாக மக்களை யாரும் ஏமாற்றிவிட முடியாது. அப்படி ஏமாற்றிக் கொண்டிருக்கிருர்கள் என்ருல், இதுவரையில் செய்திருக்கின்ற தப்புப் பிரசாரங்களைக் கணக்குப் போட்டுப்பார்த்தால், நாட்டில் ஒருவிதமான வேலையும் நடக்காமல் தொந்தரவும் சண்டையும் தானே இருந்து கொண்டிருக்க முடியும்? ஆனல், அப்படி தொந்தரவும் சண்டையுமா நடந்து கொண்டிருக்கிறது? வடக்கு, தெற்கு, என்பதெல்லாம் இன்று நேற்று ஏற்பட்டதா, என்ன? எத்தனையோ காலமாக, ஏதேதோ காரணங் களுக்காகப் பேசப்படுகிறது. ஒரு ஊர்க்காரருக்கு இன் ெெரு ஊர்க்காரர் பேரில் கோபம் என்ருல், இரண்டு ஊரார்களுக்குமாக சண்டை. ஒரு ஊரில் ஜாதிப் பெய ரைச் சொல்லி தகராறு உண்டாக்கிக் கொண்டிருப்பார் கள். இன்ெெரு ஊரில் கிணற்றில் தண்ணீர் எடுப்பது சம்பந்தமாக சண்டை இருக்கும். இப்படி எங்கேயாவது சண்டை இல்லாமல் இருக்கிறதா என்ன? இது மாதிரி சண்டை நூற்றுக்கணக்கான வருஷங்களாக நடந்து கொண்டிருக்கிறது. கிராமங்களில் மட்டுமா இந்தச் சண்டை? நகரங்களிலும் தகராறு இருந்து கொண்டிருக்கும். ஆனல், இவ்வளவுக்குமிடையே மக்கள் ஒற்றுமையாகத்தான் வாழ்ந்து கொண்டிருக் கிருர்கள்.

பத்திரிகையை எடுத்து தினசரி பார்ப்போமா னல் என்ன அதில் இருக்கிறது? 'அங்கு சண்டை, இங்கு கலகம், அங்கே வெட்டிக்கொண்டான்' என்று எல்லாம் பார்க்கிரேம். அதனல் ஊரெல்லாம் கலகமா செய்துகொண்டிருக்கிருர்கள்? சச்சரவா நடந்து கொண் டிருக்கிறது? சண்டையும் இல்லை. சச்சரவும் இல்லை. பத்திரிகையில் போட ஏதோ கவர்ச்சிகரமாக அவர்க ளுக்கு வேண்டும். அதற்காக அவர்கள் அப்படிப் போடு

கிறார்கள். 'அதுபோல் நம்முடைய வேலைத் திட்டங்கள் பற்றியும் கவர்ச்சிகரமாகப் போடவேண்டும். அப்படிப் போட்டால்தான் ஜனங்கள் வாங்கிப் படிப்பார்கள்' என்றும் கூறப்படுகிறது. ஜனங்கள் பத்திரிகையை அதிகமாக வாங்கிப் படிக்கவேண்டுமென்பதற்காக பத்திரிகைக்காரர்கள் அப்படிப் போடுகிறார்கள் என்றால், அரசாங்கமும் அப்படிப் போட முடியுமா என்ன? அது அவர்களுடைய தொழில், அதற்காகப் போடுகிறார்கள். அந்தத் தொழில் மூலம் அவர்கள் சம்பாதிக்கவேண்டும். அரசாங்கத்திற்கு அதுவா தொழில்? அது அல்ல அரசாங்கத்தின் வேலை.

## யாருக்காக பதவி?

யாருக்காக நாம் இருக்கின்றோம்? பொது ஜனங்களைக் காப்பாற்றுவதற்காக இருந்தால், பொது ஜனங்களின் நன்மைக்காகப் பாடுபடுவதாக இருந்தால், பொது ஜனங்களுடைய க்ஷேமம்தான் நம்முடைய லட்சியமாக இருந்தால் நாம் யாரைப்பற்றியும் பயப்பட வேண்டிய அவசியமே இல்லை. நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்றால்தானே நாம் பயப்பட்டுக் கொண்டிருக்கவேண்டும்? மந்திரியாகவோ முதல் மந்திரியாகவோ எத்தனை நாளைக்கு இருந்துவிட முடியும்? நாம் ஏன் பயப்பட வேண்டும்? பயம் இருந்தால்தானே நாம் ஆட்கள் சேர்க்க வேண்டியிருக்கும்? அந்த பயம் நமக்கு இருக்க வேண்டாம். முதலில் அந்தப் பயத்தைப் போக்கிவிடுங்கள். நல்ல காரியமாக இருக்கிற வரையிலும், உண்மையிலேயே மக்களுக்காகச் சேவை செய்யவேண்டும் என்ற ஆர்வம் இருக்கிற வரையிலும் யாரும் நம்மை எதிர்க்கவே முடியாது. அப்படி எதிர்க்கிறார்கள் என்றால், எதற்காக எதிர்க்கிறார்கள்? நம்மைவிட மக்களுக்கு இன்னும் தீவிரமாக வேலை செய்யவேண்டும் என்பதற்காகத் தானே?

மூடிவிட்டுப் போய்விடலாம்......

யாருடைய நன்மைக்காகவும் க்ஷேமத்திற்காகவும் நாம் பாடுபட வேண்டுமென்று ஆசைப்படுகிறோமோ, அவர்களுடைய நன்மைக்கும் க்ஷேமத்திற்கும் உண்மையாக யார் சேவை செய்தாலும் நமக்கு நல்லதுதான். நம்முடைய வேலையைத் தானே அவர்கள் செய்யப் போகிறார்கள். அவர்களுக்கு நாம் உதவியாக இருக்கலாம். அந்த மாதிரியான மனப்பான்மை நமக்கு இருக்கிறவரைக்கும் நாம் பயப்பட வேண்டிய அவசியமே இல்லை. ஏதோ தவறுதலாக நினைக்கவேண்டிய அவசியம் இல்லை. சர்க்கார் ஊழியர்களைக் கொண்டு பலம் தேடிக் கொள்ளக்கூடிய அளவுக்கு காங்கிரஸ் அவ்வளவு பலஹீனமாக இல்லை. அப்படியிருந்தால் மூடிவிட்டுப் போய்விடலாம். அந்த பயம் யாருக்கும் வேண்டாம்.

இன்று காங்கிரஸ் அரசாங்கம் இருக்கிறது. இது எப்படி வந்தது? மக்கள் எல்லோரும் காங்கிரஸ் திட்டத்தை ஒத்துக் கொண்டதால்தான் வந்தது. யாரோ குறிப்பிட்ட ஒருவருக்காக வந்துவிடவில்லை. ஐந்து வருடத் திட்டம் வந்தது. சுமார் ஐயாயிரம் கோடி ரூபாய் செலவில் நாட்டு மக்களின் நன்மைக்காக ஐந்தாண்டுத் திட்டம் போடப்பட்டது. திட்டம் நல்லது என்று பட்டதால் மக்கள் அதை ஒத்துக் கொண்டார்கள். அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக காங்கிரஸ் அரசாங்கம் இருக்கிறது. அதை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு நம்மைச் சார்ந்தது. அதில் அரசாங்க ஊழியர்களுக்கும் பொறுப்பு இருக்கிறது. மக்களுடைய நம்பிக்கையைப் பெற்று ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக பொறுப்பும் அதிகாரமும் நமக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

**காங்கிரசும் அரசாங்க ஊழியர்களும்**

திட்டத்தை நிறைவேற்ற வேண்டியது எல்லோருடைய பொறுப்புமாகும். மந்திரிகளுக்கும் உத்தியோகஸ்தர்களுக்கும், மற்றவர்களுக்கும் இதில் கூட்டுப் பொறுப்பு இருக்கிறது. இதில் உத்தியோகஸ்தர்களுக்கு எவ்வளவு பொறுப்பு, மற்றவர்களுக்கு எவ்வளவு பொறுப்பு என்று எடை போட்டுப் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை.

அரசாங்க ஊழியர்களாக இருக்கக் கூடியவர்கள் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளவேண்டும். அதாவது காங்கிரசுக்காகத்தான் அரசாங்க ஊழியர்கள் எல்லாம் வேலை செய்கிறார்கள் என்ற தப்பு எண்ணம் மக்களிடையே வரவிடக்கூடாது. மக்களுக்கு வித்தியாசம் தெரியாது. காங்கிரஸ்தான் அரசாங்கம் என்று அவர்கள் நினைத்துக்கொண்டிருப்பார்கள். அரசாங்க ஊழியர் காங்கிரஸ்காரர்களையும் கூட ஒன்றாக நினைத்துக்கொண்டு அரசியல் மாறுபாடு உள்ள கட்சிகள் ரகர்க்கம் பண்ணிக் கொண்டிருப்பார்கள். அரசாங்க ஊழியர்கள் அதற்கெல்லாம் அப்பாற்பட்டவர்களாக இருக்கவேண்டும். அந்தத் தொந்தரவு வரவேண்டிய அவசியமில்லை என்று நாம் மனதில் நன்றாக உணர்ந்து கொள்ளவேண்டும்.

# 3. கிராம ஊழியர்களுக்கு

சமுதாயத்துறையில் வேலை செய்யவேண்டும், கிராமங்களில் வேலை செய்யவேண்டும் என்று ஆசைப் படக்கூடியவர்கள் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் என்ன? கிராமங்களுக்குச் சென்றால் அங்கே யாரைப் பார்க்கிறோம்? சாதாரணமாக, கிராம முக்கியஸ்தர்கள். பல பெரியவர்கள் இருக்கிறார்களே, அவர்களுக்கு விஷயம் தெரியாதா? அவர்களுக்கு எல்லா விஷயமும் தெரியும். எவ்வளவு செய்யப் போகிறார்கள், எவ்வளவு செய்ய முடியும் என்று உங்களுக்குத் தெரிந் ததைவிட அவர்களுக்குத் தெரியும். "மார்ச் மாதம் முடியப்போகிறது, இவ்வளவு பணம் 'லாப்ஸாக' போகிறது, அதற்குள்ளாக வீடு கட்டிவிடுங்கள்" என் றெல்லாம் அவர்கள் கேட்பதாகச் சொல்கிறார்கள். இதற் கெல்லாம் அவர்கள் கணக்குப் போட்டு வைத்திருக் கிறார்கள். இந்த விஷயங்கள் எல்லாம் அவர்களுக்குத் தெரியும்.

## பொறுப்பான வேலை

ஆனால், அதே கிராமத்தில் விஷயம் தெரியாதவர் களும இருக்கிறார்கள். அவர்களிடத்திலே நாம் போகி றோமா என்பதுதான் முதல் பிரச்னை. அவர்களிடத்தில் போய் விஷயத்தைச் சொல்லவேண்டியது நம்முடைய கடமை. அவர்களுக்கும் நமக்கும் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள வேண்டியது மிக அவசியம். ஆனால், அங்கு இருக்கும் பெரியவர்களையும் நாம் விட்டுவிடக் கூடாது.

அவர்களிடமும் போகவேண்டும். இரண்டு பேரையும் சேர்த்து வைக்க வேண்டும். முதலில் பெரியவர்களைப் போய்ப் பார்க்கவில்லை யென்றால் உங்களுக்குத் தங்கக் கூட இடமில்லாமல் போய்விடலாம். இன்னும் கிராமத்தில் அந்த அளவுக்கு கட்டுப்பாடுகள் இருக்கின்றன. அவர்கள் மனதில் சந்தேகம் இல்லாமல் பார்க்க வேண்டும். அவர்களுக்கும் சேவைசெய்ய வேண்டும். ரொம்பக் கஷ்டமான வேலை. சிரமமான வேலை. அந்தச் சிரமமான வேலைகளுக்கெல்லாம் நீங்கள் பொறுப்பு ஏற்றுக்கொண்டிருக்கிறீர்கள். அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கும் பொறுப்பாளர்கள் நீங்கள். சமுதாயக் கல்வி அமைப்பாளர்கள்தான் அதற்கு பொறுப்பானவர்கள். 'அமைப்பாளர்கள்' என்பதற்குப் பதிலாக 'பொறுப்பாளர்கள்' என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளுங்கள்.

உங்களுடைய வேலை பொறுப்பான வேலை. எல்லாவற்றிற்கும் சேர்ந்து நீங்கள் பொறுப்பு ஏற்றிருப்பதினால் ஒரு வேலைக்கும் பொறுப்பில்லாமல் இருப்பதாகத் தோன்றும்! என்ன வேலைக்குப் பொறுப்பாய் இருக்கிறீர்கள் என்று எல்லோரும் கேட்பார்கள். இன்ஜினீயரிங் இலாகாவைக் கேட்டால் தாங்கள் போட்ட ரோட்டைக் காட்டுவார்கள்; இன்னொரு இலாகாவைக் கேட்டால் மாட்டைக் காட்டுவார்கள். வைத்திய இலாகாவைக் கேட்டால் ஆஸ்பத்திரியைக் காட்டுவார்கள், ஹரிஜன இலாகாவைக் கேட்டால் ஹரிஜனங்களுக்கான வீட்டைக் காட்டுவார்கள். ஆனால், நீங்கள் என்ன காட்டுகிறீர்கள்? மற்றவர் போல் குறிப்பிட்டுக் காட்ட ஒன்றும் இல்லை. ஆனால் நீங்கள் ஒன்றுமே செய்யவில்லை என்று நினைக்க வேண்டாம். இந்த எல்லா வேலைகளுக்கும் நாம் பொறுப்பு என்கிற மனப்பான்மை நமக்கே முதலில்

இருக்க வேண்டும். அத்தகைய உணர்ச்சியோடு நாம் வேலை செய்ய வேண்டும்.

**கட்சிப் பிரச்சாரமல்ல**

அரசாங்க உத்தியோகம் என்றால் ஒரு இலாகாவிற்கும் இன்னொரு இலாகாவுக்கும் தொடர்பு இல்லாமல் இருக்கிறது. 'இது என்னுடைய வேலை அல்ல' என்ற மனப் பான்மை இருக்கக்கூடாது. எந்த இலாகாவாக இருந்தாலும் எல்லா வேலையும் ஒன்றுதான் என்ற உணர்வு ஏற்படவேண்டும். மக்களுக்குச் சேவை செய்யக் கூடிய விஷயத்தில் நாம் எல்லோரும் ஒன்றுபட்டிருக்கிறோம் என்ற உணர்ச்சி நமக்கு வர வேண்டும். எந்த வேலைக்கும் எல்லோருக்கும் பொறுப்பு இருக்கிறது. யாரோ பொறுப்பு என்று நினைத்துக் கொள்ளக்கூடிய மனப்பான்மை இருக்கக்கூடாது. எல்லோரும் ஒன்று சேர்ந்து ஒரு நல்ல புதிய சமுதாய அமைப்பை அமைக்க வேண்டுமென்று நாம் ஆசைப்படுகின்றோம்.

இதையெல்லாம் செயலில் கொண்டுவருவதற்கு எந்த முறையைக் கையாளவேண்டும்? ஏழை ஜனங்களுக்கு எந்த வகையில் உதவி செய்ய முடியும், மக்களுடைய மனதை நம்முடைய வேலைத் திட்டத்தில் திருப்புவதற்கு என்ன முறைகளைக் கையாளமுடியும்?

சர்க்கார் வேலைகளைப் படம் போட்டுக் காட்டினால் கட்சிப் பிரச்சாரம் செய்வதாக மற்ற அரசியல் கட்சிகள் நினைக்கலாம். நாம் அதற்காகச் செய்யவில்லை. நம்முடைய வேலைத் திட்டத்தில் சாதாரண மக்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. அவர்களுக்குத் தெரியும். ஆனால், விஷயம் தெரியாமல் இருக்கிறார்களே, அவர்களுக்குத் தெரிவிக்க என்ன செய்வது? அதற்காகப் படங்கள் போடலாம், நாடகங்கள் போடலாம். இவை எல்லா

வற்றிலும் அந்தந்த ஊரிலுள்ளவர்களையே நடிக்கச் செய்யவேண்டும்.

## பாட்டும் கூத்தும்

பாட்டுகள் போட்டுக் கொடுக்கலாம். நல்ல பாட்டுகளாக அமைத்துக் கொடுத்தால் விறகு வெட்டிக் கொண்டிருக்கும் போதும் பாடிக் கொண்டிருப்பார்கள். பெண்கள் சமையல் செய்யும்போதும், களை எடுக்கும் போதும், பாட்டு பாடுவார்கள். அந்த அளவுக்குப் பாட்டு அமைத்துக் கொடுக்கப்பட வேண்டும். அவர்கள் மறந்துவிடக்கூடிய பாட்டாக இருக்கக்கூடாது. அவர்கள் சுலபமாகப் புரிந்து பாடக்கூடிய பாட்டாகவும் இருக்க வேண்டும். பெரிய வார்த்தைகளை, கிராம மக்கள் புரிந்துகொள்ள முடியாத வார்த்தைகளைப் போட்டு பாட்டு அமைக்கக்கூடாது. சுலபமான ராகத்தில் பாட்டுகளை அமைத்துக் கொடுக்க வேண்டும். அவர்களுக்கு ஒரே ராகம்தான் தெரியும். அந்தப்படி ராகம் இருக்கவேண்டும். பாட்டிலுள்ள கருத்துக்காகவே அவர்கள் பாடுவதில்லை. முக்கியமாக அவர்களுடைய சந்தோஷத்திற்காகவே பாடுகிறார்கள். நம்முடைய கருத்தையும் அந்தப் பாட்டுக்களில் நாம் புகுத்த வேண்டும். அந்த முறையில் பாட்டுகளை அமைத்துக் கொடுக்க வேண்டும்.

கூடுமானவரை கிராம மக்களே நடிக்கக்கூடிய நாடகமாக எழுதிக்கொடுத்து நடிக்கச் செய்யவேண்டும். தெருக்கூத்து போடாத கிராமமே கிடையாது. பௌர்ணமி வரக்கூடிய நாட்களில் கிராமங்களில் நாடகங்கள், தெருக் கூத்துக்கள் நடக்கும். அம்மாதிரி இப்போதும் போட வேண்டும் ஒரு ஊரில் இருக்கிற பத்து பேர்களைக் கூப்பிட்டு, இவ்விதம் நாடகம் போடச் செய்துவிட்டோமானால் கிராக்கி அதிகமாக இருக்கும்.

எங்கள் ஊரிலும் பாட்டுப் போட்டுக் கொடுங்கள், நாடகம் எழுதிக் கொடுங்கள் என்று மற்ற ஊர்களிலும் கேட்க ஆரம்பித்துவிடுவார்கள். அவ்விதம் பல நாடகங்களைத் தயாரிப்பதற்கும், அவைகளில் கருத்துக்களைச் சொல்வதற்கும் நாம் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

## சொந்தக் கதை கேட்கத் தொடங்குங்கள்

அடுத்தபடியாக, மக்களிடத்தில் நெருங்கிய பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். கூட்டம் போட்டுப்பேசலாம் என்றாலும், அதைவிட முக்கியமானது ஒவ்வொரு வீட்டிலும் போய் உட்கார்ந்து கொண்டு பேசுவது மிகவும் முக்கியமான காரியம். 'எதற்காக இவர்கள் வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்!' என்று ஒரு சிலர் நினைப்பார்கள். மற்றும் சிலர், இதைத் தொந்தரவாகவும் நினைப்பார்கள். அவர்கள் எப்படி நினைத்தாலும் பரவாயில்லை. எது சொன்னாலும் பரவாயில்லை. முதலில் தண்ணீர் கேட்டு வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, கொஞ்ச நேரம் அங்கு உட்கார்ந்து பேசுங்கள்.

முதலில் பெரியவர்களுடைய வீட்டுக்குப்போய் தண்ணீர் சாப்பிடுங்கள், பிறகு அடுத்த வீட்டுக்குப் போங்கள். அங்கே உட்கார்ந்துகொண்டு அவர்களைப் பற்றிக் கேட்கலாம். "உங்களுக்கு எத்தனை ஏக்கரா நிலம் இருக்கிறது? அதில் என்ன விவசாயம் பண்ணுகிறீர்கள்? விவசாயத்தில் எவ்வளவு வரும்படி கிடைக்கிறது? சென்ற வருடம் கடன் வாங்கினீர்களா? அப்படியென்றால் திருப்பிக்கொடுக்கவேண்டிய கடன் எவ்வளவு இருக்கிறது? கடன் எங்கேயிருந்து வாங்கினீர்கள்? என்ன வட்டிக்குக் கடன் வாங்கினீர்கள்? என்று எல்லாம் அவர்களைக் கேளுங்கள். அப்படிக் கேட்கும்போது அவர்களுக்கே ஒரு சிரத்தை வந்து

விடும். ஏனென்றால் நீங்கள் அவர்கள் சொந்தக் கதையைக் கேட்க ஆரம்பிக்கிறீர்கள். அவர்களது சொந்த சமாசாரத்தைப்பற்றி கேட்காமல் பொதுவாக ஊருக்குப் பள்ளிக்கூடம் வேண்டுமா? அது வேண்டுமா, இது வேண்டுமா, என்று கேட்டால் அவர்கள் உங்களிடம் பேசக்கூட மாட்டார்கள். ஆகவே, முதலாவது அவர்களுடைய குடும்பக் கதையைக் கேளுங்கள் அதிலிருந்து நீங்கள் அவர்களுக்கு எந்தமாதிரியான உதவி செய்யலாம் என்பதைப்பற்றி அவர்களுடன் யோசனை செய்யுங்கள்.

## உதவிசெய்ய வழி தோன்றும்

ஊழியர்கள் என்ன என்ன செய்ய வேண்டும் என்று வரையறுத்து சர்க்கார் உத்தரவு போட்டுவிட முடியுமா என்ன? ஒவ்வொரு குடும்பத்தினுடைய கஷ்டத்தையும் சர்க்கார் தெரிந்தா வைத்திருக்கிறது, அதைப்பற்றி நீங்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று உங்களுக்கு உத்தரவு போட? நீங்களே யோசிக்க வேண்டும். கடைசியாக அந்தக் குடும்பத்திற்கு மாதம் பத்து ரூபாய் அல்லது வருடத்திற்கு நூறு ரூபாய் அதிக வருவாய் வருவதற்காவது உடனே என்ன வழி செய்யலாம் என்று நீங்களே யோசனை செய்யுங்கள். அப்பொழுது உங்களுக்கு யோசனை தோன்றக் கூடும்.

ஒரு குடும்பத்தினர் அதிக வட்டிக்குக் கடன் வாங்கியிருக்கக்கூடும். அந்த நபருக்குக் குறைந்த வட்டிக்கு கடன் கிடைக்கக்கூடுமானால் நாற்பது, ஐம்பது ரூபாய் அவர்கள் மிச்சம் செய்யலாம். இன்னொருவருக்கு தம்முடைய பையனை எந்தப் பள்ளிக்கூடத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பது என்று தெரியாமல் இருக்கலாம். இம்மாதிரியாக அவர்களுடைய அன்றாட வாழ்க்கையிலே, குடும்ப வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகளைச்

செய்வதில் நீங்கள் அவர்களுக்கு உதவியாக இருக்கிறீர்கள் என்ற எண்ணத்தை முதலில் புகுத்துங்கள். அது மட்டுமல்ல. உண்மையாகச் செய்ய முடிந்த காரியங்களைச் செய்துதர நீங்கள் தயாராக இருக்க ஆரம்பித்தால் நல்லது. அவர்களுக்கு அது உபயோகமாக இருக்கும். நம்முடைய திட்டமும் நிறைவேறுவதாக இருக்கும். அதைவிட்டு விட்டு வேறு என்ன செய்தாலும் முடியாது.

## எளியவர்களுக்கான திட்டங்கள்

திட்டம் யாருக்கு? வசதி இருக்கிறவர்களுக்கா? அவர்களுக்காக அல்ல. ஏனென்றால் அவர்களுக்கு எல்லா வசதியும வாய்ப்பும் இருக்கிறது. அவர்களுடைய பிள்ளைகளைச் சேர்த்துக்கொள்ள பள்ளிக்கூடமா இல்லை? அல்லது உபாத்தியாயரா இல்லை? எல்லாம் இருக்கிறது. அவர்களுடைய பிள்ளைகளை அந்த ஊரிலுள்ள பள்ளிக்கூடத்திலேயே சேர்க்கவேண்டும் என்ற அவசியமகூட அவர்களுக்கு இல்லையே, பெரிய ஊர்களுக்குப் படிக்க அனுப்பி விடுவார்கள். அவர்களுக்கு அத்தகைய வசதி இருக்கிறது. தங்கள் ஊரிலேயே ஆஸ்பத்திரி இல்லாவிட்டாலும் அவர்களைப் பொறுத்தவரையில் கஷ்டமில்லை. எந்த டாக்டரை வேண்டுமானாலும் அவர்கள் தாங்கள் இருக்கும இடத்திற்கே வேண்டுமானால் அழைத்து வந்து வைத்தியம் செய்து கொள்ள அவர்களிடம் வசதி இருக்கிறது. ஆகவே, வசதியுள்ளவர்கள் தங்களுடைய தேவைகளை எப்படியாவது பூர்த்தி செய்துகொள்ள முடியும.

ஆனல். வசதியற்றவர்கள், தேவையுள்ளவர்கள் இருக்கிறார்களே, அவர்கள் என்ன செய்வார்கள்? அவர்களுக்கு நாம் என்ன செய்யப்போகிறோம் என்பதைப் பற்றி யோசிக்க வேண்டும். அவர்களுடைய முக்கிய

மான நலன்களை அரசாங்கம் கவனிப்பார்கள் என்பதை
அவர்கள் மனதில் உணர்த்த வேண்டும். அவர்கள்
அத்தகைய வசதிகளைப் பெறக்கூடிய முறையில், அதற்
கான காரியங்களை நீங்கள் செய்யவேண்டும். "அரசாங்
கம் திட்டம் வைத்திருக்கிறார்கள், ஆஸ்பத்திரி வசதி
களைச் செய்கிறார்கள், குடி தண்ணீர் வசதிகளை நல்ல
முறையில் செய்து கொடுக்கிறார்கள், விவசாய இலாகா
வைப் பயன் படுத்திக் கொண்டால் இப்பொழுது கிடைப்
பதைவிட அதிக வருமானம் பெற முடியும். குறைந்த
வட்டியில் கடன் கிடைக்க ஏற்பாடுகள் நடந்து
வருகின்றன. உங்களுக்கு வேண்டிய துணிகளை நீங்களே
உற்பத்தி செய்து கொள்வதற்காக ராட்டை வசதி இருக்
கிறது. நூல் நூற்றுக் கொள்ளலாம். தறியில் நெசவு
செய்து கொள்ளலாம், நூலை விற்கவும் வாங்கவும் ஏற்
பாடு இருக்கிறது." என்று எல்லாம் அவர்களுக்கு
எடுத்துச் சொல்லலாம்.

இவ்வளவு திட்டங்களை வைத்துக் கொண்டிருக்
கிறோமே, இவைகளை அவர்களுக்கு எடுத்துச் சொல்ல
வேண்டாமா? இவைகளையெல்லாம் அவர்களுக்கு
எடுத்துச் சொல்வதற்காக கூட்டம் போட்டுச் சொல்லி
விட்டால் போதுமா? தனித்தனியாக வீடு வீடாகப்
போனால்தான் முடியும். ஒவ்வொருவருடைய வீட்டுக்கும்
போய், அங்கு உட்கார்ந்துகொண்டு அவர்களுடைய
குடும்ப க்ஷேமத்திற்காக, குடும்ப நலனுக்காக நாம்
என்ன செய்ய முடியும் என்று அவர்களுடன் யோசிக்க
வேண்டும். அப்பொழுதுதான் காரியங்களைச் சாதிக்க
முடியும். ஒரு பிளாக் டெவலப்மெண்ட் ஆபீசரின் கீழ்
60 கிராமங்கள் இருக்கும். அந்த 60 கிராமங்களில்
உள்ளவர்களையும் பத்தே நாட்களில் நேரில் கண்டு
சொல்லிவிட முடியாது. ஆகவே ஒவ்வொரு கிராமமாக
எடுத்துக் கொள்ளுங்கள். அத்துடன் வீடுவீடாகப்

போங்கள். வீடு வீடாகப் போவதினால் அதிக நாள் ஆகுமே என்று யோசிக்க வேண்டாம். எவ்வளவு நாள் ஆகிறதோ அவ்வளவு நாள் ஆகட்டும். பதினைந்து நாட்களோ ஒரு மாதமோ ஆறுலும் ஆகட்டும். அதனால் பரவாயில்லை.

## தேவைக்கும் வசதிக்கும் முடிவு ஏது?

வாழ்க்கையிலே வசதி ஏற்பட ஏற்பட, தேவையும் உயர்ந்து கொண்டே போகும். மனிதனுடைய தேவைக்கு முடிவே இல்லை. தேவை இருப்பது நல்லதுதான். தேவை இருக்க வேண்டும். இல்லையென்றால் செயலற்றுப் போய்விடும். தேவை இல்லாத நாள் எது? ஒருவனுடைய கடைசி நாள் தான் தேவை இல்லாத நாள். ஆகவே, நம்முடைய வேலை தொடர்ந்து நடக்க வேண்டிய வேலை. ஏதோ ஐந்து வருடங்களுக்குள் முடிந்துவிடக்கூடிய வேலை அல்ல; நெடுகச் செய்து கொண்டு போகவேண்டிய வேலையாக இருப்பதால், அவசரப்பட வேண்டாம். ஏதோ ஒரு மாதத்திற்குள் அல்லது இரண்டு மாதத்திற்குள் எல்லாக் கிராமங்களுக்கும் சென்றுவிட வேண்டும் என்று அவசரப்பட்டு ஒரு வேலையையும் முடிக்காமல் போக வேண்டாம்.

நேராக, சாவகாசமாக, ஒரு கிராமத்திற்குப் போய், அதிலும், வீடு வீடாகப் போய், அவர்களுடைய நிலையை யைத் தெரிந்துகொண்டு அவர்களுக்கு நாம் எப்படி உதவி செய்ய வேண்டுமென்று யோசனை செய்வதற்கு, எவ்வளவு நாள் ஆகுமோ அவ்வளவு நாள் எடுத்துக் கொள்ளுங்கள். அதில் தப்பு இல்லை. ஒரு கிராமத்தை முடித்துவிட்டு அடுத்த கிராமத்திற்குப்போக வேண்டும். இப்படி ஒவ்வொரு கிராமமாக, முறையாக, நேராக, அவசரப்படாமல், விரிவாகச் செய்து கொண்டே போக நாம் ஏற்பாடு செய்து கொள்ளவேண்டும். அப்போது

தான் நம் வேலையைத் தொடர்ந்து நடத்திக் கொண்டு போகமுடியும்.

**திட்டங்கள் தானே நடக்க......**

கிராமத்திலுள்ளவர்கள் நல்வாழ்வு வாழ்ந்து அவர்கள் பொருளாதார நிலையில் உயர்ந்தால்தான், நம்முடைய நாடு க்ஷேமமாக இருக்கமுடியும். அதை அடிப்படையாகக் கொண்டுதான் நம்முடைய திட்டங்கள் அமைக்கப் பட்டிருக்கின்றன. இந்தத் திட்டங்கள் நிறைவேறுவதிலே மக்களுடைய மனதில் மாறுதல் ஏற்படச் செய்ய வேண்டும். காரியங்களை நிறைவேற்றுவதற்கு அது அடிப்படையாக இருக்க வேண்டும். மனதிலே நல்ல மாறுதல் ஏற்பட்டு நாம் செய்யும் காரியங்கள் நல்ல முறையில் நடக்க வேண்டும் என்ற உணர்ச்சியை மக்கள் மனதில் ஏற்படுத்தி விட்டால், திட்டங்கள் தானே நடக்கும். நமமுடைய காரியங்களும் வெற்றி யடைந்துவிடும்.

மனதிலே மக்களுக்கு என்ன இருக்கிறது! அவர்களுடைய மனதில் ஏற்படக் கூடிய எண்ணங்களை நாம் மாற்றுவிட்டால், '' இந்த அரசாங்சம் நமக்காக இல்லை '' என்று சாதாரண ஜனங்கள் நினைப்பார்கள். ' அரசாங்கம் நமக்காக இல்லை, யாரோ பெரியவர்களுக்காக இருக்கிறது ' என்று நினைப்பார்கள். ஆகவே, நாம் பெரியவர்களை மாத்திரம் பார்த்துவிட்டு மற்றவர்களைப் பார்க்காமல் வந்து விட்டால், அவர்கள் என்ன நினைப்பார்கள்? ' காங்கிரஸ் அரசாங்கத்திலுள்ள அதிகாரிகள் ஏதோ பெரியவர்கள் வீட்டில் வந்து சாப்பிட்டுவிட்டுப் போய் விடுகிறார்கள் ' என்று நினைப்பார்கள். அதற்காகப் பெரியவர்களைப் பார்க்கவே கூடாது என்பது அல்ல. அவர்களைப் பார்ப்பதோடுகூட மற்றவர்களையும் பார்க்கவேண்டும். எல்லா பெரியவர்களுமா தப்பாக எண்ணுகிறார்கள்?

இல்லை. ஊருக்குப் பெரியவர்களாக இருந்து கொண்டு கிராம நன்மையைப் பாதுகாக்கக் கூடியவர்களாக இருப்பவர்களும் இருக்கிறார்கள். ஆனால், பெரியவர்களை மட்டும் பார்த்துவிட்டு வந்து விட்டால், மற்றவர்களுக்குக் கோபம் வந்துவிடும். அப்பொழுது உங்கள் வேலை நடக்காமல் அவர்கள் செய்து விடலாம். ஆகவே யாருக்கும் கோபம் வரும்படியாக நடந்து கொள்ளக்கூடாது. பெரியவர்கள் மனதை முதலில் மாற்றுங்கள். அவர்களுடைய அன்பையும் ஆசியையும் முதலில் வாங்கிக் கொண்டு வேலை செய்ய ஆரம்பிக்க வேண்டும். பிறகு ஒவ்வொரு வீட்டுக்கும் போங்கள். கிராமத்தில் இருக்கக் கூடிய சக்திகளையெல்லாம் ஒன்று திரட்ட வேண்டும்.

**குடும்ப வாழ்க்கை உயர வழி காணுங்கள்**

கிராமத்திலே கணக்கில்லாத தொந்தரவுகள் இருக்கும். ஜாதிச் சண்டை இருக்கும். எல்லா விதமான சண்டைகளும் இருக்கும். எத்தனையோ விதமான தப்பான காரியங்களும் நடந்து கொண்டிருக்கும். அதை எல்லாம் திருத்தவேண்டும் என்று நீங்கள் போகாதீர்கள். அப்படி யெல்லாவற்றையும் திருத்த வேண்டுமென்று நீங்கள் ஆரம்பித்தால் ஒன்றுமே செய்ய முடியாமல் போய் விடும்.

நான் முதலில் சொன்னது மாதிரி, குடும்ப வாழ்க்கையில் நாம் எத்தகைய உதவி செய்யப் போகின்றோம் என்ற வகையிலே, அவர்களுடைய மனதில் இருக்கும் தப்பு எண்ணத்தை மாற்ற வேண்டும். இந்த அரசாங்கம் பொதுவாக எல்லோருக்கும் நல்ல காரியங்களைச் செய்வதற்காக ஒன்றும் தெரியாதவர்களுக்கு உதவி புரிவதற்காக அரசாங்கம் இருக்கிறது என்ற எண்ணத்தை முதலில் மக்களிடையே வளர்த்து விட்டால் நம்முடைய அரசாங்கம் நமக்கு வேண்டியதைச் செய்து கொடுப்பார்கள் என்ற எண்ணம் அவர்களுக்கு வரும். அந்த

எண்ணத்தை அவர்களிடையே உண்டாக்காமல் இருக்கிற வரைக்கும் ‘ஏதோ வருகிறார்கள், சொல்லுகிறார்கள். நாமும் ஏதோ கேட்டு வைப்போம், வருகிறது வரட்டும், வராவிட்டால் போகட்டும்’ என்று கேட்டு வைப்பார்கள். அந்த மனப்பான்மை ஏற்பட்டு விடக்கூடாது.

## வரி விதிப்பும் செலவும்

நமக்கு வருவாய் என்ன? பணம் எங்கேயிருந்து வருகிறது? வரி போட்டால் மக்களுக்குக் கொடுக்கச் சக்தி இருக்கிறதா என்பதையெல்லாம் படிப்படியாக யோசிக்கும்படியான எண்ணத்தை உண்டாக்க வேண்டும். பத்து வருடங்களுக்குள் எத்தனையோ கோடிக்கணக்கான பணம் வரியாக வசூல் செய்தோம். சுதந்திரம் வருவதற்கு முன்னால் மலையாளம், கன்னடம், ஆந்திரம் இவைகள் எல்லாம் நம்மோடு இருந்தபோது 14 கோடி ரூபாய் வருமானம் இருந்தது. இப்பொழுது அவை எல்லாம் பிரிக்கப்பட்டும் சுமார் 80 கோடி ரூபாய் வரையில் வருமானம் வந்து கொண்டிருக்கிறது. இந்தப் பணம் எங்கே போகிறது. ஜனங்களுக்காகவே அத்தனை தொகையும் செலவு செய்கிறோம். இந்தப் பணம் எப்படி வந்தது? வரி மூலமாக வந்திருக்கிறது. இந்தப் பணத்தை நாம் எவ்வளவு கஷ்டப்பட்டுச் சேர்த்து வருகிறோம் என்பதைக் கவனிக்க வேண்டும். ஆதலால், பணத்தை எப்படி ஒழுங்காக செலவழிக்க வேண்டும் என்பதிலும் நாம் கருத்தாக வேண்டும்.

## செய்தி இலாகாவின் சேவை

செய்ய முடியாத காரியங்களைச் சிலர் வேண்டுமென்றே கேட்பார்கள். ஜனங்கள் சும்மா கேட்டுக் கொண்டுதான் இருப்பார்கள். ஆஸ்பத்திரி வேண்டுமென்று கேட்டால் டாக்டர்களுக்கு எங்கே போவது? இம் மாதிரி கஷ்டங்களெல்லாம் இருக்கிறது. ஜனங்

களில் சிலர் வேண்டுமென்றே சில காரியங்களைக் கேட்பார்கள். அதற்கு நாம் பதில் சொல்லத் தயாராக இருக்க வேண்டும். அதற்காக புள்ளி விவரங்கள் தயாராக வைத்துக்கொள்ள வேண்டும். மத்திய அரசாங்கத்திற்கும் இதில் கூட்டுப் பொறுப்பு இருக்கிறது. மத்திய அரசாங்கமும் இதில் கணக்குச் சொல்ல வேண்டும்.

செய்தி இலாகா புள்ளி விவரங்களைத் தருவார்கள். இதைப் புரிந்து கொள்ளாமல், சிலர் வேண்டுமென்றே ஏதாவது கேட்டால் பதில் சொல்லுங்கள். இவ்விதம் அவர்கள் மனதை மாற்றவேண்டும். அவர்களது மனதை மாற்ற அவர்களிடம் நீங்கள் போகும்போது, உங்கள் மனதை அவர்கள் மாற்றிவிடப் போகிறார்கள்! நீங்கள் அவர்களை மாற்ற முயற்சிக்க வேண்டாம். அவர்கள் கேட்கும் விவரங்களுக்கு பதில் சொல்ல, புள்ளி விவரங்களை நீங்கள் தயாராக வைத்துக் கொள்ளுங்கள். அதற்கான புள்ளி விவரங்களைத் தயாராக வைத்துக்கொள்ள வேண்டும். எத்தனையோ புத்தகங்கள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் படிக்க நேரம் கிடைப்பதில்லை. நாம் படிக்க நேரம் கிடைக்கிறதா என்ன? எனக்கு இவைகளைப் படிக்க போதிய நேரம் கிடைப்பதில்லை. அதேபோல்தான் ஒவ்வொருவருக்கும். அவரவர்களுடைய வேலைக்கிடையில் படிக்க முடியாமல் இருக்கலாம். செய்தி இலாகாவில் புத்தகங்கள் நிறைய இருக்கின்றன.

**படித்துக் காட்டுங்கள்**

ஒவ்வொரு ஜில்லாவிலும் செய்திருக்கிற வேலைகளைப் பற்றி புத்தகம் வெளியிட்டிருக்கிறார்கள். அவை நன்றாக இருக்கின்றன. அதையெல்லாம் எப்போது படிப்பது? அவரவர்களுடைய பிழைப்புக்காகத் தொழில் இருக்கிறது அவரவர்களுக்கு. அதனால் படிக்க நேரம் கிடைப்பதில்லை. ஊரில் உள்ளவர்களில் ஒரு சிலருக்கு நேரம் இருக்கும். இவர்கள் இத்தகைய வெளியீடுகளைப் படிப்

பார்கள். பழைய காலத்தில் பாரதம், இராமாயணம் போன்ற கதைகளையெல்லாம் சிலர் படிக்க மற்றவர்கள் கேட்பதுண்டு, சாயங்கால வேளைகளில். அதைப்போல திட்டம் சம்பந்தமாகவும் பாட்டாகப் போட்டு வைத்துக் கொண்டு கிராமப் புறங்களில் எடுத்துச் சொல்லலாம். இந்தக் காரியத்தை முடிந்தவரையில் நீங்களே செய்யுங்கள். படித்து மற்றவர்களுக்குச் சொல்வது நல்லது, மாலை வேளையில், ஏனென்றால், ஒவ்வொருவரும் படிப்பது என்றால் முடியாத காரியம்.

**வேலைப்பளுவும் நல்ல காரியமும்**

இம்மாதிரி பல துறைகளில் அன்றாட வாழ்க்கையில் நாம் மக்களுடன் தொடர்பு வைத்துக்கொள்வதுதான் பெரிய காரியம். அதற்காக ஏற்பாடு செய்வதுதான் சமூக நலத் திட்டத்தின் அடிப்படை. அதை விட்டுவிட்டு, பணம் போதவில்லை, வேலைப்பளு ஜாஸ்தியாக இருக்கிறது, ஆபீஸ் வேலை ஜாஸ்தியாக இருக்கிறது, வெளி வேலையைப் பார்க்க நேரம் இல்லையே என்று மலைக்க வேண்டாம். வேலை ஜாஸ்திதான். நல்ல காரியம் செய்யப் போகிறவர்களுக்கு வேலை ஜாஸ்தியாகத்தான் இருக்கும். கணக்குப் போட்டு வேலை பார்ப்பது பட்டணங்களிலுள்ள ஆபீஸ்களிலும், கலெக்டர் ஆபீஸ்களிலும் இருக்கட்டும் ஆனால், கிராம சமூகத் தொண்டர்கள் அந்தக் கணக்குப் போட வேண்டாம். எட்டு மணி நேரம் என்று கணக்குப் போட வேண்டிய அவசியம் இல்லை. எட்டு மணிக்குப் பதினாறு மணி வேண்டுமானாலும் வேலை செய்யாலாமே! நாங்கள் எல்லாரும் கணக்குப் போட்டுக்கொண்டா வேலை செய்கிறோம்? எங்களுக்கு கணக்கே இல்லை. அது மாதிரி எண்ணம் உங்கள் மனதிலும் வர வேண்டும். வேலைப்பளு அதிகம் என்பதற்காக குமஸ்தாக்கள் வேண்டும் என்றெல்லாம் கேட்டுக்கொண்டே போனால்

முடிவே இருக்காது. அதற்கெல்லாம் பணம் கண்டுபிடிப்பது கஷ்டம். கஷ்டப்பட்டுப் பணம் கண்டு பிடிக்கிறோம். நான் ஏதோ கொடுக்காமல் இருப்பதற்காகச் சாக்கு போக்குச் சொல்வதாக யாரும் நினைக்க வேண்டாம். உண்மையிலேயே இவைகளையெல்லாம் கொடுப்பதற்குப் பண வசதி இல்லை.

கிராம சமூகத் தொண்டர்கள் அதிகமாகத்தான் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அதைக் கண்டு சந்தோஷப் படுங்கள். வீட்டிலே பல கஷ்டங்கள் ஏற்படுகின்றனவே, அப்பொழுதெல்லாம் நாம் என்ன செய்கிறோம்? 'எப்போதாவது நமக்கு நல்ல காலம் வராதா?' என்ற நம்பிக்கையோடு காரியங்களைச் செய்து கொண்டே போகிறோம் அல்லவா? அது போல் நாமும் வேலை செய்துகொண்டே போனால் நமக்கும் நல்ல நிலைமை ஏற்படத்தான் செய்யும். ஒரு வேலையும் பண்ணமல் வீட்டில் சும்மா இருக்கக் கூடாது. எவ்வளவு வேலைகள் இருந்தாலும் சரி, அவை எவ்வளவு கஷ்டமாக இருந்தாலும் சரி, அது எவ்வளவு பெரிய காரியமாக இருந்தாலும் சரி, அவற்றைச் செய்து முடித்தே தீருவது என்று மனதில் உறுதியாக வைத்துக் கொண்டால் போதும். அந்த எண்ணம் இருந்தால்தான் வேலையைச் சரியாகச் செய்ய முடியும். அதேபோல் நல்ல முறையில் இந்தக் காரியத்தைச் செய்யவேண்டும். நாம் உண்மையிலேயே சமூக நலத் திட்டத்தில் நல்ல வேலை செய்து வருகிறோம். நல்ல வேலைகள் நடந்து கொண்டு வருகின்றன. இனியும் அவ்வாறே தொடர்ந்து நடந்து கொண்டிருக்கும்.

## புரட்சியும் மாறுதலும்

**ஆனல், எதிர்க்கட்சிக்காரர்கள் கிராமம் கிராமமாகச் சென்று "ஒன்றும் நடக்கவில்லை" என்று சொல்கிறார்கள்**

என்றல், கிராமத்தில் ஏற்படக்கூடிய முன்னேற்றம் அவர்களுக்குத் தெரியாது என்றுதான் அர்த்தம். முன்னேற்றத்தை அவ்வளவு ஜல்தியாகத் தெரிந்துகொள்ள முடியாது.

நாட்டில் ஏற்பட்ட பெரிய மாறுதலே அவர்களுக்குத் தெரியாமலிருந்தது. சுயராஜ்யத்தைப் பற்றியும் இம் மாதிரிதான் அப்பொழுது பலர் நினைத்துக் கொண்டிருந் தார்கள். 1920–ம் வருடத்தில் மகாத்மா காந்தியடிகளின் தலைமையின்கீழ் சுயராஜ்ய இயக்கம் நடந்துகொண் டிருந்த காலத்தில் நாங்கள் இராட்டையைத் தூக்கிக் கொண்டு, கதர்த் துணியை உடுத்திக்கொண்டு போய்க் கொண்டிருந்தபோது, எங்களைப் பார்த்து, "இவர்கள் எல்லாரும் பைத்தியக்காரர்கள், உப்புச் சாக்குத் துணியைப் போட்டுக்கொண்டு போகிறார்கள்" என்று கேலி செய்தவர்களும் உண்டு. சுயராஜ்யம் வருவதற்கு முதல் நாள் வரைக்கும் அவர்கள் நம்பவில்லை. அதே மாதிரிதான் நாட்டின் முன்னேற்றத் திட்டங்களையும் நம்பாமல் ஒரு சிலர் இருக்கிறார்கள். அவர்களைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை. அவர்கள் சொல்லிக்கொண்டு இருக்கட்டும். ஆனல், நாம் செய்ய வேண்டிய வேலைகளைச் சரியான முறையில், உறுதியாகச் செய்தால் நம்மை அறியாமல் நாட்டில் மாறுதல் ஏற்பட்டுக்கொண்டிருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

புரட்சி எப்படி ஏற்பட்டது? அகிம்சா முறையில், உலகமே பிரமிக்கத் தக்க வகையில், தகராறு இல்லாமல், பலாத்காரம் இல்லாமல் ஒரு அரசாங்க முறையை மாற்றி யமைத்த புதுமை நமக்குத் தெரிகிறது. அதுபோலவே, இப்போதும் கிராமங்களில் ஒருவருக்கும் தெரியாமல் புதிய புரட்சி நடந்து கொண்டிருக்கிறது; அந்தப் புதிய புரட்சியைச் செயலில் நடத்திக்கொண்டிருக்கக் கூடிய

பெரும் பொறுப்பு கிராம சேவகர்களாகிய, கிராம சேவகிளாகிய, சமூகக் கல்வி அமைப்பாளர்களாகிய உங்களையும் இன்னும். அப்பெரும்பணியில் ஈடுபட்டிருப்பவர்களையும் சார்ந்தது.

இவ்விதம் நல்ல முறையில் கிராமங்களில் மாறுதல் ஏற்பட்டுக்கொண்டிருப்பது உங்களுக்கேகூடத் தெரியாது. நல்ல முறையில் மாறுதல் ஏற்பட்டுக்கொண்டே போகிறது. ஆகவே, இந்தக் கருத்தில் மற்றவர்கள் யாராவது குறை சொன்னால் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. இந்த நல்ல திட்டத்தை நீங்கள் எப்படியும் நிறைவேற்றியாக வேண்டும். அதற்காகவே நீங்கள் இருக்கிறீர்கள். எவ்வளவு சிரமங்கள் இருந்த போதிலும், அவைகளைப் பொருட்படுத்தாமல் திட்டங்களை நிறைவேற்றியே தீருவது என்பதை உங்கள் மனத்தில் உறுதியாகக் கொண்டு வேலை செய்யுங்கள்.

யாராவது குற்றம் சொல்கிறார்கள் என்றால், எங்களைத்தான் குற்றம் சொல்வார்கள். எங்களைப்பற்றி எது சொன்னாலும் நீங்கள் கவலைப்பட வேண்டாம். ஆனால், உங்கள் காரியத்தில் நீங்கள் கண்ணாக இருக்க வேண்டும். இந்த வேலையை முழு உற்சாகத்துடன் நீங்கள் செய்ய வேண்டும். இப்போதும் செய்துகொண்டிருக்கிறீர்கள். இன்னும் திறம்பட நல்ல முறையில் செய்ய வேண்டும்.

**கிராமங்களில் கூடிப் பேசுவோம்**

கிராமப் புறங்களில் அடிக்கடி கூட்டங்கள் கூட்டிக்கொண்டிருப்பது மிகவும் அவசியம் என்று நான் நினைக்கிறேன். பெரிய ஊரில் கூடினால் எனக்கும் வேலை இருக்கும்; உங்களுக்கும் வேலை இருக்கும். உங்களுக்குச் சினிமா பார்க்க வேண்டும், வேடிக்கை பார்க்கவேண்டும் என்று ஏற்பட்டுவிடும். ஏனென்றால் நகரங்களில் வேடிக்கைக்குப் பல வழிகள் இருக்கின்றன. அதனால் வேறு வழி

களில் கவனம் சென்றுவிடக்கூடும். ஆனால், கிராமங்களில் கூட்டம் கூடினால் சாப்பிட்டுவிட்டுத் திரும்பத் திரும்ப உங்கள் முகத்தை நாங்கள் பார்க்க வேண்டும், எங்கள் முகத்தை நீங்கள் பார்க்க வேண்டும். நாம் இங்கு இருந்தே தீர வேண்டும். ஒருவருக்கொருவர் பேசியே ஆக வேண்டும். அதுபோலத்தான் கிராம நல வேலை சம்பந்த மாகக் கூட்டப்படும் பிளாக் ஆலோசனைக் கமிட்டிக் கூட்டங்களைக்கூட ஹெட்குவார்ட்டர்சில் கூட்டுவதைவிட ஒவ்வொரு கிராமத்திலும் கூட்டலாம். அப்படிக் கூட்டினால் அதைப் பார்ப்பதற்கு கிராமத்திலுள்ள பத்து இருபது பேர்கள் வருவார்கள். அவர்களும் தங்கள் கிராமத்தினுடைய முன்னேற்றத்தைப்பற்றி என்னென்ன பேசுகிறோம் என்பதைப்பற்றிக் கேட்பார்கள். என்ன காரியங்கள் நடக்க வேண்டும் என்று நாம் பேசுவதை அவர்களும் கேட்கட்டும். கிராமங்களில் இத்தகைய கூட்டங்களைக் கூட்டி அவர்களுக்கும் அங்குள்ள வேலை களில் உற்சாகத்தை ஊட்டவேண்டியது நம்முடைய முக்கியமான வேலை.

# 4. சோறு போடும் திட்டம்

சமுதாய நலத் திட்ட வேலையில் ஈடுபடும் ஊழி யரும், மக்களும் அடிக்கடி ஒன்று கூடி விழா நடத்த வேண்டும். இதன் மூலம் நல்ல காரியம் செய்வதில் உற் சாகம் அதிகரிக்கும். ஆமாம், நல்ல காரியத்துக்கு மக்கள் கூடுவதுதான், திருவிழா. மற்ற நாட்களில் மக்களுக்கு வேலை. கூடமுடியாது. காரணம், வேலை செய்தால்தான் சாப்பாடு. ஆனதால், தினசரி திருவிழா நடத்த முடியாது. அதனால்தான், நம் முன்னோர்கள் வருஷத்துக்கு ஒரு நாள் திருவிழா நடத்தினார்கள்.

மக்கள் எல்லோருடைய வாழ்க்கைக்கும் வசதி செய்து கொடுக்கும் திருவிழா, சமுதாயத்தை மேன்மைப் படுத்தும் திருவிழா! சமுதாயம் என்றால் என்ன? நாட்டில் உள்ள கோடிக்கணக்கான மக்கள்தான் சமுதாயம். சுயராஜ்யம் வரும் முன்பே மகாத்மா காந்தி மக்களின் துன்பத்தையும் வறுமையையும் உணர்ந்தார்கள். இன்று ரோடு வசதி யிருக்கிறது. அந்தக் காலத்தில் கிராமத் துக்குச் செல்வது சுலபமல்ல. மாட்டு வண்டியில் போக வேண்டும். இல்லாவிட்டால் நடந்துதான் செல்ல வேண்டும். அப்பொழுது, அதாவது ஐம்பது வருஷங் களுக்கு முன்பு மக்கள் நலத்துக்கு, வீடில்லாமல், சோறில் லாமல், கஷ்டப்படும் மக்களின் நலனுக்குத் திட்டம் போட்டோம். அதுதான் சமுதாய நலத் திட்டம்.

**மக்கள் நலனுக்காக அரசாங்கம்**

சுதந்திரம் யாருக்கு வந்தது ? சென்னையில் அரசாங்கம் நடப்பது கோடிக்கணக்கான மக்களின் நலனுக்காக, நன்மைக்காக என்ற உணர்ச்சி வேண்டும். வோட்டுப் போட்டதோடு பொறுப்பு தீர்ந்துவிடவில்லை. உங்களுக்கு பிடித்த கட்சிக்கு வோட்டுப் போட்டிருக்கலாம். நாம் ஏற்படுத்தியிருக்கும் இந்த அரசாங்கம் பொறுப்புடன் காரியங்கள் செய்கிறதாவென்று பார்க்க வேண்டும். மகாத்மா கனவு கண்ட திட்டத்தை அமுல் நடத்த இன்றைய சர்க்கார் கோடிக்கணக்கான ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள்.

முக்கியமாக நம் நாட்டிலே உள்ள கஷ்டம் எல்லோருக்கும் சோறு இருக்கிறதா என்பதுதான். ரோடு, மின்சார விளக்கு, பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி எல்லா ஊர்களுக்கும் கிடைக்கும். இரண்டாவது, அல்லது மூன்றுவது திட்டம் முடிவதற்குள்ளாகவே எல்லா கிராமங்களுக்கும் கிடைத்துவிடும். இல்லாவிட்டால் மூன்றுவது திட்ட காலத்தில் முடிந்துவிடுகிறது. ஆனால், முன்னமே சொன்னது போல சோறு போடுவது முக்கியம். சோறு போடு என்று நீங்கள் கேட்கிறீர்களா? ஏன் கேட்பதில்லை. அது முடியாத காரியம் என்று நீங்களே நினைக்கிறீர்கள். சத்திரம் வைத்துச் சோறுபோட முடிந்தால் போடமாட்டோமா என்ன ? சத்திரம்கூடக் கட்டவேண்டியதில்லை. வாடகைக் கட்டிடத்தில் வைத்துவிடலாம். ஆனால் சாப்பாடு போட அரிசி வேண்டுமில்லையா ? எப்படியோ அரிசியைச் சேகரம்பண்ணி ஊர் மக்களெல்லோருக்குமே பத்து நாள் சோறு போடுவதாக வைத்துக்கொள்ளலாம். எல்லோரும் சத்திரத்துக்கு சாப்பாட்டுக்கு வந்துவிடுவார்கள். ஏர் பிடிக்க யாரிருப்பார்கள் ? பையன் பள்ளிக்கூடம் போகமாட்டான். அரிசி தீர்ந்து போகும், ஏர் பிடிக்காமல் அரிசி எப்படி விளையும் ? பணத்தை

உண்ணமுடியுமா? பணம் இருந்தால் பம்பு செட்டு வாங்கிப் போட்டு உணவு உற்பத்தியைப் பெருக்கலாம். சமுதாய நலத்திட்டம் "**சோறு போடும் திட்டம்**". உணவு உற்பத்தியைப் பெருக்க வழியும், வசதியும் தரும் திட்டம்.

## வசதிக் குறைவாக உள்ளவர்களுக்கு உதவி

நமது பிரச்னை சாப்பாட்டுப் பிரச்னை. புளியமரத்தில் ஒரு கட்சிக் கொடி பறக்கிறது. அதைவிட இரண்டடி உயரத்தில் மற்றொரு கொடி பறக்கிறது. இப்படித்தான் வழிகாட்டுகிறோம். இது சோறு போடுமா? இதையெல்லாம் மறந்து கோடிக்கணக்கான மக்களுக்குச் சோறு கிடைக்க வழி செய்வதுதான் சமுதாய நலத்திட்டம். இந்தத் திட்டத்தின் மூலம்தான் விவசாயம் ஓங்க வழி செய்கிறோம். விவசாயத்துக்கு வேண்டியவைகளை, வசதி உள்ளவர்கள் வாங்கிக்கொள்கிறார்கள். வசதியில்லாதவர்களுக்கும் அவை கிடைக்க வழி செய்ய வேண்டும்.

ஏழைகளுக்குத் தனியார் மூலம் கடன் கிடைக்கிறதா? கிடைக்கிறது. ஆனால் வட்டி, ரூபாய்க்கு ஒரு அணாவாக இருக்கிறது. எங்கள் ஊர்ப்பக்கத்திலே, நூதனமாக ஒரு வட்டி உண்டு. அதாவது நெல் வட்டி என்று சொல்வார்கள். நூறு ரூபாய் வாங்கினால், அறுவடையானதும் இரண்டு மூட்டை நெல், வட்டியாகத் தர வேண்டும். அதாவது ஒன்றுக்கு அரை வட்டி. அதனால் கீழ் நிலையில் உள்ளவர்களுக்கு, கடன் கொடுக்கச் சர்க்கார் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்துகிறோம். அதற்கு எதிர்ப்பு ஏன்? எதற்காக? எதிர்ப்பு எங்கிருந்து வந்தது? இத்தனை நாள் வந்ததா? கிராமத்திலே ஏழைகளுக்கு ரூபாய் கொடுத்து வீடு கட்டிக்கொள்ளச் சொல்கிறார்கள். அதைக் கண்டு ஒரு சிலர் பொறாமைப் படுகிறார்கள். மந்திரிகளைப் பார்த்துப் பொறாமைப்

படலாம். பணக்காரரைப் பார்த்துப் பொருமைப் படலாம். ஆனால், ஏழைகளுக்கு உதவுவதைக் கண்டு பொருமைப் படலாமா?

**வேலை இல்லாத் திண்டாட்டம் தீர வேண்டாமா?**

இந்த நாட்டுக்கு விவசாயத்தினால்தான் விமோசனம் பத்துத் தொழிற்சாலைகளை வைத்தால் பத்தாயிரம் பேருக்கு வேலை கொடுக்கலாம். அதாவது, இருபது கோடி ரூபாய் செலவு செய்தால் பத்தாயிரம் பேருக்கு வேலை கொடுக்கலாம். ஆனால், ஒரு பிளாக் வட்டாரத்தில் மட்டும் மூன்று லட்சம் பேர் இருக்கிறார்கள். தொழிற்சாலை வை என்றால், எத்தனை தொழிற்சாலை வைப்பது? விவசாயத்தால், சிறு தொழில்களால்தான் நம் நாட்டில் வேலையில்லாமையைப் போக்க முடியும். இதைத் தான் ஐம்பது வருஷங்களுக்கு முன் மகாத்மா காந்தி சொன்னார். மக்களுடைய வருவாயை அதிகரிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். பல தொழில்கள் இருக்கின்றன. மீன் பிடிப்போருக்கு பொருளுக்கேற்ற விலை கிடைக்கிறதா? ஏதோ அவசரமாக ஓடிவந்து, எவரிடமாவது அரையும் குறையுமாக விற்றுவிட்டுப் போய்விடும் மீன் பிடிப்போருக்குத் தக்க விலை கிடைக்கும்படி செய்ய வேண்டும்.

நம் நாட்டிலே அரை ஏக்கராக்காரர்கள்தான் அதிகம். பத்து ஏக்கரா வைத்துக்கொண்டிருப்பவர் கடனுக்கு விடுவதில்லை. நெல்லையும் அவசரமாக விற்று விடுவதில்லை. அரை ஏக்கராக்காரருக்குத் தகுந்த விலை கிடைக்கும்படி செய்யவேண்டும்.

சோற்றுக் கஷ்டம் ஒன்று மட்டுமா? இல்லை. நம் நாட்டிலே எதற்கும் கஷ்டம்தான். குழந்தையைப் பள்ளிக்கூடம் அனுப்புவதற்கும், குழந்தைக்குத் துணி வாங்குவதற்கும், மற்ற செலவுகளுக்கும் நூறு ரூபாயாவது இல்லாவிட்டால் குடும்பம் ஒழுங்காக நடக்காது.

விவசாயிகள் வேலையில்லாத நேரத்தில், நூல் நூற்கலாம். ஒரு ராட்டையை வைத்து நூற்றுப் பாருங்கள். பின்பு அதனால் கிட்டும் பலனைப் பாருங்கள். நூற்பது மூலம் கூடுதலாகப் பணம் வரும். பல செலவுகளுக்கு அது ஈடு கொடுக்கும்.

## நீண்ட காலத் திட்டங்களில் கவனம் வேண்டும்

நமக்கு எல்லாவற்றிற்கும் ஒரே அவசரம். குறுகிய காலத்திலேயே வருமானம் வேண்டும் என்றுதான் நெல்லையே பயிர் செய்கிறோம். புளியமரத்தை வைத்தால் பலன் கிட்டப் பத்து வருஷங்கள் ஆகும். ஆதலால் அதை நடுவதில்லை. அதுமட்டுமா, இருக்கிற மரத்தையும் வெட்டிச் சூளை போடுகிறோம். அல்லது அடுப்புக்கரியாக்கி விடுகிறோம். புளி விலை ஏறுகிறது என்கிறது என்றால்' ஏன் ஏறுது? அதுமட்டுமில்லை, புளி விலை ஏறுகிறது பார் என்று நாமும் சேர்ந்து சொல்கிறோம்.

மாடு வாங்க இந்தத் திட்டத்திலே ரூபாய் இருநூறு முன்னூறு கடனைத் தருகிறோம். கோழி வளர்த்தால் நான்கு முட்டையாவது கிடைக்கும். இதைத்தான் சமுதாய நலத் திட்டத்தில் எல்லாம் சொல்கிறார்கள். கோழி, ஆடு வளர்ப்பில் ஈடுபடுங்கள் என்று சொன்னால், அக்கறை வரவில்லை. மக்களுக்கு உணவில்லையென்றால், சுதந்திரம் வந்து பயனில்லை. அதனாலே மக்கள் அனைவருக்கும் உணவு கிடைப்பதற்கான திட்டங்களை நடத்தத்தான், இச்சமுதாய நலத் திட்டம் உருவாகியிருக்கிறது. இதை நன்றாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். கிராம மக்கள் தங்களுக்குச் சம்மந்தமில்லாத சிறு சிறு விஷயங்களுக்காகச் சண்டை போடாமல் ஒற்றுமையாக இருக்கவேண்டும்.

# 5. கல்வித் துறையில் மக்களார்வம்

மக்களுக்குத் தன்னம்பிக்கையும், தங்கள் ஊர்த் தேவையைத் தாமே பூர்த்தி செய்துகொள்ள முடியும் என்ற உணர்ச்சியும் ஏற்பட்டுவிட்டால் மகத்தான சாதனைகளை எல்லாம் செய்து காட்டுவார்கள். இதற்கு இன்று நாடெங்கும் நடைபெற்று வரும் மாணவர்களுக்கு நடுப்பகல் உணவு, பள்ளிச் சீரமைப்பு, சீருடை வழங்குதல் ஆகியவற்றில் மக்கள் காட்டிவரும் அக்கறையும் ஆர்வமும் அதில் மேற்கொள்ளும் பங்கும் பெரிதும் எடுத்துக்காட்டாக உள்ளன.

பள்ளிச் சீரமைப்பு என்றால் என்ன? இத்திட்டத்தின் மூலம் என்னென்ன காரியங்கள் நடைபெற்று வருகின்றன.

தங்களுடைய கிராமப் பள்ளிக்கூடங்களுக்கு வேண்டிய தளவாடங்களை வாங்கிக்கொள்ள அங்கேயே வசூல் பண்ணிய பணத்தைச் சேகரித்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தப் பணத்தின் உதவியாலே, பள்ளிக் கூடங்களுக்கு வேண்டிய சகல வசதிகளையும் செய்து கொடுப்பதற்காக இந்தத் திட்டம் வகுக்கப் பட்டிருக்கிறது.

அந்தந்தக் கிராமத்திலுள்ள பள்ளிக்கூடங்களுக்கு வேண்டிய வசதிகளை, அக்கிராமத்திலுள்ளவர்களே செய்து கொடுப்பது என்பதுதான் இந்தத் திட்டத்தின் லட்சியம்.

பொதுவாக, பல பள்ளிக்கூடங்களைப் பார்க்கிறோம். பள்ளிக்கூடம் சரியான இடங்களில் இருக்காது. ஏதோ வாடகை இடத்தில் இருக்கும். சொந்த இடத்தில் இருந்தால்கூடக் குழந்தைகள் படித்துக் கொண்டிருக்கும்போதே மழை பெய்தால் ஒழுகும். உட்காருவதற்கு ஆசிரியர்களுக்கு நாற்காலி இருக்காது. குழந்தைகள் உட்காருவதற்கும் இடமிருக்காது. நல்ல இடம் இல்லாததுமட்டுமல்ல; குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டிய உபகரணங்களும் இல்லாமலேயே இருந்து வருகிறது.

இதற்குக் காரணம் அரசாங்கம் இவ்வளவும்வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று மக்கள் நினைக்கிறார்கள். அரசாங்கத்தாருக்குப் பொறுப்பு இருந்தாலுங்கூட அத்தனையையும் வாங்கிக் கொடுக்க வசதியில்லாமல் இருக்கிறது. அந்த நிலைமையை மாற்றுவதுதான் இந்தத் திட்டத்தின் முக்கிய நோக்கம்.

**அரசாங்கமும் மக்களும் ஒன்றுதான்**

மக்களுடைய மனதில் அரசாங்கம் ஒன்று தனியாக இருக்கிறது; அதுவே பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. அந்த எண்ணம் மாற்றப்பட வேண்டும். அதுதான் இந்தத் திட்டத்தின் லட்சியம். அந்த எண்ணம் மாற்றப்பட்டு, மக்களும் அரசாங்கமும் ஒன்றுதான்; நாமே பணம் கொடுத்துச் செய்தாலும், அரசாங்கம் வரியாக வசூல் பண்ணினாலும் ஒன்றே என்ற எண்ணம் நமக்கு ஏற்படவேண்டும். அந்த நிலைமையையும், உணர்ச்சியையும் உண்டாக்கி விட்டால் நாம் அடைந்த சுதந்திரத்தின் பலனை நாம் அடைந்து விட்டோம் என்று ஆகும்.

சுதந்திரம் என்பது தன்னம்பிக்கைதான்; நம்முடைய நாட்டை நாம் ஆளமுடியும் என்ற ஒரு நம்பிக்கை உணர்ச்சிதான்.

அந்த உணர்ச்சியை **மகாத்மா காந்தி** நம்மிடையே வளர்த்தார். அந்த நம்பிக்கையால்தான் சுதந்திரத்தைப் பெற்றுவிட்டோம். அந்த நம்பிக்கையால்தான் சுதந்திரத்தைப் பாதுகாக்கவும் முடியும். அந்த நம்பிக்கையை இழந்துவிட்டால் சுதந்திரம் போய்விடும். நமக்கே நம்பிக்கை இல்லாவிட்டால்—நம்முடைய பல்வேறு பிரச்னைகளை நாம் தீர்த்துக்கொள்ள முடியும் என்ற உணர்ச்சி நமக்கு வராவிட்டால்—நம்முடைய நாட்டை நாம் பாதுகாத்துக்கொள்ள முடியாது.

**யாத்திரையில் ஒரு கட்டம்**

இது கல்விக்காக மட்டும் வைத்தது என்று நினைக்க வேண்டாம். இடம் கொடுப்பதற்கு, பணம் கொடுப்பதற்கு, சாமான்கள் கொடுப்பதற்கு என்பதற்காக மட்டும இந்தத் திட்டம் வகுக்கப்பட்டதல்ல.

இந்தத் திட்டத்தின் அடிப்படை, பரந்த நோக்கத்துடன் அமைக்கப்பட்டிருக்கிறது. சுய உணர்ச்சியை உண்டாக்கவும், சுய நம்பிக்கையை உண்டாக்கவும், கல்வி விஷயத்திலாவது அரசாங்க உதவியில்லாவிட்டால்கூட மக்களே இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள முடியும் என்பதைக் காட்டவுந்தான்.

கல்வி விஷயத்தில் அரசாங்கத்தின் பொறுப்பைவிட நம்முடைய பொறுப்பு அதிகம் என்பதை உணர்ந்து, அரசாங்கப் பொறுப்பு இல்லாமல், நாமே பொறுப்பை ஏற்று நடத்தக்கூடிய சக்தி ஏற்பட்டுவிட்டால், அப்புறம் எல்லாவற்றிலுமே சக்தி நமக்குத் தானே வந்துவிடும். அந்தச் சக்தியை வளர்க்கவேண்டும் என்பதுதான் நம்முடைய நோக்கம்.

இதைத்தான் நாற்பது ஆண்டுகளாக மகாத்மா காந்தி நமக்கு உபதேசம் பண்ணினார். அந்த உபதேசத்திலே சுதந்திரம் அடைந்து ஒரு கட்டம்தான் வந்திருக்

கிறது. இன்னும் நீண்ட யாத்திரை நாம் செய்ய வேண்டியிருக்கிறது. அதற்கு அந்த மகான் வழிகாட்டிக் கொண்டே போகிறார். அவர் போகும் திக்கை நோக்கினால் நம்மை அறியாமலேயே நமக்கு வழியேற்பட்டுக் கொண்டே போகும்.

நமக்கு ஏற்படக்கூடிய சிரமங்களையும், தொந்தரவுகளையும் நினைத்துச் சோர்வு அடையவேண்டிய அவசியமே இல்லை. நம்முடைய பல்வேறு பிரச்னைகளை நாம் யோசிக்கும் காலத்தில் நம்மை அறியாமலேயே சோர்வு ஏற்பட்டுவிடும். எத்தனையோ தகராறுகள்—ஜாதியின் பேரால், மதத்தின் பேரால், கிராமத்திற்குக் கிராமம் தகராறுகள், குடிப்பதற்குத் தண்ணீர் இல்லாமை—எத்தனையோ தொந்தரவுகள் இருக்கின்றன. இத்தனை தொந்தரவுகளுக்கும் மத்தியிலே மகாத்மா காந்தியை நாம் மனத்தில் நினைத்தால்-அவர்போட்டிருக்கும் திட்டங்களை மனத்தில் நினைத்தால்—அவர் காட்டும் வழியை நாம் நோக்கிக் கொண்டிருப்போமேயானால்-நமக்குத் தன்னம்பிக்கை ஏற்பட்டுவிடும். அந்தத் தன்னம்பிக்கையின்—சுய உணர்ச்சியின்—பயனைத்தான் இந்தத் தேசத்திலுள்ள சகல திட்டங்களையும் வகுத்து நாம் நடத்த முடியும்.

## பெருமை தரும் சாதனை

**மகாத்மா காந்தி** *ஆதாரக் கல்வி வேண்டும் என்று கூறிய காலத்திலே ஜனங்கள் கல்வி விஷயத்தில்* **அரசாங்க உதவியை எதிர் பார்க்கக்கூடாது; சமூகத்தின் "மகாப்பொறுப்பை," அரசாங்கத்திடம் ஏன் ஒப்புவிக்க வேண்டும்? நாமே நம்முடைய கல்விக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் அந்தந்த ஊரிலேயே தயார் செய்துகொள்ள வேண்டும் என்ற அடிப்படைத் தத்துவத்தைத்தான் மனத்தில் கொண்டிருந்தார்.**

**ஆதாரக் கல்வி** என்ருல் ஏதோ நூல் நூற்பது, காய்கறித் தோட்டம் போடுவது என்றுமட்டும் நினைக்க வேண்டாம். அவைகளெல்லாம் குழந்தைகளைத் தொழிலிலே பழக்குவதற்காக ஏற்பட்டவைகளே தவிர வேறில்லை.

மகாத்மா காந்தியினுடைய ஆதாரக் கல்வித் தத்துவமானது கல்விக்காக, அரசாங்க உதவியில்லாமல் சமூசமே ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும் என்பதாகும். அந்த உயரிய இலட்சியம் நிறைவேறுவதற்குத் தான் இந்த வழிகள் எல்லாம்.

**இந்த வழியிலே நம்முடைய சென்னை மாகாணம் வழிகாட்டியதைப் பார்த்து நாம் எல்லாரும் பெருமைப் படலாம்.** நம்முடைய தேசத்தில் ஐந்தாவது வரையில் கட்டாயக் கல்வியைக் கொடுக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு, தேசம் பூராவும் பிரயத்தனங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. ஆனல் இதைப் போன்று நல்ல நிலைமையில் பொது மக்களுடைய உதவி நமக்குக் கிடைத்துக்கொண்டு வருமேயானல், எட்டாவது வரையில் கட்டாயக் கல்வித் திட்டத்தை நம்முடைய மாகாணத்தில் ஆரம்பித்துவிடலாம். அடுத்து, பத்தாம் வகுப்பு வரையிலும் கட்டாயக் கல்வியை விஸ்தரிக்க முடியும். அதை செய்யத்தான் போகிறேம்.

**பிற மாகாணங்களெல்லாம் ஏழைக் குழந்தைகளுக்குப் பகலுணவு கொடுக்கத் தயங்கிக்கொண்டு, முடியுமா என்று பரிசீலனை செய்துகொண்டிருந்த காலத்தில், துணிந்து மக்களுடைய உதவியினுலே அந்தந்தக் கிராமத்திலுள்ள ஏழைக் குழந்தைகளுக்குச் சாப்பாடு அளிக்கலாம் என்ற தைரியத்தோடு, அந்தத் திட்டத்தை நாம் ஆரம்பித்தோம். வெற்றிகரமாக**

**நடந்து வருகிறது. இன்னும் பல இடங்களுக்கும் விஸ்தரித்துக்கொண்டே இருக்கிறோம்.**

அதைப் பார்த்து நம்முடைய மதிப்புக்குரிய தலைவர் நேருஜி அவர்கள், சென்னை இராஜ்யத்தைப் பார்த்து மற்ற இராஜ்யங்களும் ஏழைக் குழந்தைகளுக்கு நண்பக லுணவு கொடுக்கும் திட்டத்தை அமுலாக்க வேண்டும் என்று யோசனை சொல்லி ஆரம்பிக்கப் பட்டுள்ளது.

அதைப்போலவே 'நாமும், நம்முடைய திட்டத்தை நல்ல முறையில் நிறைவேற்றினுல், எட்டாவது வரையில் கட்டாயக் கல்வியை நிச்சயமாகக் கொடுக்கமுடியும் என் பதை நம்முடைய நாட்டிற்குக் காட்ட முடியும் என்று நான் நம்புகிறேன்.

கல்வி விஷயத்தில் எல்லாப் பெரியோர்களுக்கும், ஒற்றுமையாக இருந்து ஆர்வத்தோடு குழந்தைகள் படிக்கவேண்டும் என்ற உற்சாகம் ஏற்பட்டு இருக்கிறது.

**யாருக்கு வசதிதர வேண்டும்?**

நம்முடைய தேசம் ஏழைகள் நிறைந்த தேசம். ஏழைகள் படிக்கவேண்டுமானுல் அரசாங்கம் நடத்தும் பள்ளிக்கூடங்களோ, தனிப்பட்டவர்கள் நடத்தும் பள் ளிக்கூடங்களோ தவிர வேறு வழியில்லை.

பணக்காரக் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம் வேண்டியதில்லை. மாதம் ஐம்பதோ நூறோ கொடுத்தால் உபாத்தியாயர் அந்த வீட்டிலேயே குடியிருப்பார். பணக்காரர்கள் அதைப்பற்றிக் கவலைப்படாமல் இருக் கிருர்கள்.

ஆனுல் ஏழைக் குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் தான் வந்து படிக்க வேண்டும் என்ற நிலையில் நாம் இருக் கின்றோம். எனவே அந்தப் பள்ளிக்கூடங்களும் உயர் தரக்கல்வி கற்பிக்கும் வசதி உள்ளனவாக இருக்க வேண்டும்.

பணக்காரக் குழந்தைகளுக்கு நல்ல ஆசிரியர்கள், நல்ல புத்தகங்கள், எத்தனையோ வசதிகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன.

இன்னும் நம்முடைய நாட்டிலே பள்ளிக்கூட வசதி நாம் செய்து கொடுத்தாலுங்கூட, பணக்காரப் பிள்ளைகள் படிக்கக்கூடிய அவ்வளவு வசதி ஏழைகளுக்குச் செய்து கொடுக்க முடியவில்லை. அவ்வளவு வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறோம்.

அந்த ஆசையை நிறைவேற்றுவது சமுதாயத்தில் உள்ள பெரியோர்களின் கடமையும் பொறுப்பும் என்பதை நாம் உணரவேண்டும். நாம் உணர்ந்துகொண்டு இருக்கின்றோம். நாம் உணர்ந்ததனால்தான் பிள்ளைகளுடைய சாப்பாட்டுத் திட்டத்தையும், இன்னும் இது போன்ற திட்டங்களையும் தைரியமாக நிறைவேற்றிக் கொண்டிருக்கிறோம்.

**நல்லெண்ணமும் உணர்ச்சியும்**

நம்முடைய ஜனங்கள் நல்ல ஜனங்கள். ஊரிலே மக்கள் கூடி வாழ வேண்டும் என்ற அபிப்பிராயம் உள்ளவர்கள். அந்த அபிப்பிராயமுள்ள மக்களை நாம் அணுகி, நம்முடைய திட்டத்தைப்பற்றி எடுத்துச் சொன்னால், அவர்களுடைய ஒத்துழைப்பை கட்டாயம் பெறுவோம். அதற்கு அடையாளம் என்னவென்று கேட்டால் இது தான்:

உங்கள் ஊரிலுள்ள பள்ளிக்கூடங்களுக்கு வேண்டிய கடிகாரத்தை, கற்பலகையை, புத்தகத்தை நீங்களே வாங்கிக்கொள்ளுங்கள்; பள்ளிக்கூடங்களுக்கு வேண்டிய சாமான்களை நீங்களே தயார் செய்துகொள்ளுங்கள் என்று நாம் சொல்லாமல் இருந்தோம். அதனால் அவர்கள் நினைத்தார்கள், அரசாங்கம் கொடுக்கட்டும், ஜில்லா போர்டு கொடுக்கட்டும், பஞ்சாயத்து கொடுக்கட்டும்

என்று. நாம் சொன்னோம், அது வேறு இது வேறு அல்ல என்று. நாம்தான் செய்யவேண்டும் என்ற உணர்ச்சியைத் தூண்டி விட்டோம். உணர்ச்சியும் நல்லெண்ணமும் இல்லாவிட்டால் நாம் என்ன சொன்னாலும் கேட்கமாட்டார்கள். அவர்கள் உள்ளத்திலே புதைந்து கிடக்கும் நல்ல உணர்ச்சியைத் தட்டி எழுப்பினோம். அந்த உணர்ச்சி வேகத்தில்தான் இந்தக் காரியங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

இந்த உணர்ச்சி வேகத்தை மகாத்மா காந்தி நாற்பது ஆண்டுகளுக்கு முன்னாலே உணர்ந்தார். நம்முடைய நாட்டிலே சுய முயற்சியோடும் தன்னம்பிக்கையோடும் எந்தக் காரியத்தையும் செய்யும் சக்தி வாய்ந்தவர்கள் இருக்கிறார்கள்; அவர்களுடைய சக்தியையும், முயற்சியையும் தட்டி எழுப்பிவிடுவோமானால், எல்லா நல்ல காரியங்களும் நடக்கும் என்பதைஉணர்ந்ததனால்தான் சுதந்திரத்தைக் கேட்டார். அதனால்தான் சுதந்திரம் வந்தது. அந்தச் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்குத் தன்னம்பிக்கையும் முயற்சியும் வேண்டும். இந்த எண்ணம் ஏற்படுமேயானால் மகாத்மா காந்தியினுடைய சர்வோதயம் தானே ஏற்பட்டு விடும்.

## மக்களுக்கே பொறுப்புத் தரும் திட்டம்

எப்படிக் கல்வி விஷயத்தில் அந்தக் கிராமத்து மக்களே பொறுப்பை ஏற்றுக்கொள்கிறார்களோ, அதே போல எல்லா விஷயத்திலும் மக்களே பொறுப்பை ஏற்றுக்கொள்ளலாம். நமக்குச் சுய உணர்ச்சியும், சுய நம்பிக்கையும் ஏற்பட்டால்தான்—இந்த இந்தக் காரியங்களைச் செய்யவேண்டும், எப்படிச் செய்ய முடியும், அரசாங்கம் யார், அரசாங்கத்திற்கு பணம் எங்கிருந்து வருகிறது, அவர்கள் எப்படிக் கொடுக்க முடியும் என்பதை எல்லாம் உணர்ந்தோமானால்தான் அரசாங்கம்

வேறு நாம் வேறு என்று நினைக்கமாட்டோம். அந்த உணர்ச்சி வராவிட்டால் அரசாங்கம் கொடுக்கட்டுமே என்றுதான் நினைப்போம்.

அரசாங்கம் கொடுப்பதென்றால் உங்களுக்கு வரி போட வேண்டும். ஒரு ரூபாய் வரி போட்டால் சர்க்கார் சிப்பந்திச் சம்பளம் முதலியவற்றில் பாதி போய்விடும். பாதிதான் உங்களுக்குக் கிடைக்கும்.

அப்படியில்லாமல் இந்தப் பணத்தை முழுவதும் நீங்களே கொடுத்தால், நீங்கள் கொடுக்கிற ஒவ்வொரு ரூபாயும் உங்களுக்கே கிடைக்கும்.

இந்த உண்மையை நாம் அறிந்துகொண்டோமே யானால் நம் ஊருக்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் நாமே செய்துகொள்ள வேண்டும் என்ற உணர்ச்சியும் ஆசையும் நமக்கு ஏற்பட்டுவிடும்.

அந்த நல்ல உணர்ச்சியை நமக்குக் காட்டுவதற்கு, முதன்மையாக இருந்து உதவிய நமது இராஜ்யக் கல்வி இலாகாவை நான் பாராட்டுகிறேன். அதற்குத் தலைவராக இருக்கக்கூடிய **ஸ்ரீமான் சுந்தரவடிவேலு** அவர்கள் கல்வித் துறையில் பலவித புதிய எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் உண்டாக்கியிருக்கிறார்; மக்களுடைய ஒத்துழைப்பை எப்படிப் பெறுவது என்பதையும் காட்டியிருக்கிறார். பெரிய மேதாவிகள் இருக்கலாம்; பெரிய அறிஞர்கள் இருக்கலாம்;. அது பெரிதல்ல. நிறையப் புத்தகங்கள் எழுதிக் குவிக்கலாம்—பயன் என்ன ? மக்களுடைய ஒத்துழைப்பை எப்படிப் பெறுவது, மக்களுக்கே பொறுப்பை எப்படிக் கொடுக்க முடியும், எந்த எந்தத் துறையிலே மக்களுடைய உணர்ச்சியை, நல்லெண்ணத்தைப் பயன்படுத்த முடியும் என்று ஆராய்ச்சி செய்து நல்லவிதமாகப் பயன்படுத்துவதுதான் பெரிது. அதை அவர் செய்து வருகிறார்.

இப்படிப்பட்ட, மக்களுடைய நல்வாழ்வுக்கான திட்டங்களைக்கூடக் கட்சிக் கண்ணோட்டத்தோடு பார்ப்பது நல்லதல்ல.

திட்டத்தினால் பயன் என்ன? திட்டத்தை நிறை வேற்றுவது யார் என்று பார்ப்பது கூடாது. இத்திட்டம் வெற்றி பெற்றால் சர்க்காருக்கு நல்ல பெயர் கிடைக்கும் அதன் மூலம் ஆளுங்கட்சியான காங்கிரஸ் கட்சிக்குப் பெருமையும் செல்வாக்கும் வளரும் என்று எண்ணிக் கொண்டும் சிலர் திட்டத்தைப் பற்றிக் குறைகூறும் போக்குக்கூட இருக்கிறதே!

மக்களுக்கு வாழ்வளிக்கும் திட்டங்களை யார் போட்டால் என்ன? அதன் மூலம் மக்களுக்குப் பலன் இருக்கிறது என்றால் அதை மக்களிடம் பரப்பி, பயன் அடையும்படி செய்யத்தானே வேண்டும்! இதுதானே மனிதத் தன்மை!

பள்ளிச் சீரமைப்பு, மதிய உணவு, சீருடையளிப்பு ஆகிய திட்டங்களைக் குறைகூறி மக்களைக் குழப்பவும் சில "பெரியவர்கள்" முன் வருகிறார்களே!

மத்தியானம் சோறு போடுவதைச் சாப்பிடுவதால் ஏழைக் குழந்தைகள் என்றென்றும் பிச்சைக்காரர்களாக இருப்பார்கள் என்றும் பேசுகிறார்கள்! இது நல்லதா? பள்ளிகளுக்கான சாமான்களை நன்கொடையாகத் தருமாறு நாலுபேரிடம் சென்று கேட்டுப் பெறும் வேலையில் பள்ளிப் பிள்ளைகளோ, அல்லது ஆசிரியர்களோ ஈடுபடக் கூடாது என்று கூடச் சிலர் சட்ட சபையிலும் 'முன்னேற்றம்' என்ற கருத்தில் பேசுகிறார்கள்! இது தேவைதானா?

**அன்றும் இன்றும்**

ஒரு காலம் இருந்தது. பள்ளிக்கூடங்கள் மிகுதியாக இல்லாத காலம் அது. இருந்த சில பள்ளிக்கூடங்களுக்கும் போதிய அளவு, குறைந்தபட்ச எண்ணிக்கையுடைய மாணவர்கள் படிக்க வராத காலம். அப்போது, ஆசிரியர்கள் தாங்களாகவே கிராமம் கிராமமாகச் சென்று பள்ளிக்கூடத்துக்குத் தமது பிள்ளைகளைப் படிக்க அனுப்பும்படி பெற்றோர்களைக் கேட்டார்கள்! போதிய அளவு பிள்ளைகள் படிக்க வராவிட்டால் பள்ளி மூடப்படும், வேலை போய் விடும் என்ற பயம் ஆசிரியர்களுக்கு இருந்திருக்கக் கூடும்.

எப்படியோ பள்ளிக்கூடத்தில் போதிய மாணவர் எண்ணிக்கை இல்லாதிருந்த நிலைமை இன்று அடியோடு மாறிவிட்டதா இல்லையா? இப்போதுள்ள பிரச்சினை பள்ளிக்கூடங்கள் இல்லை யென்பதல்ல; போதிய அளவு பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. பிள்ளைகளும் பெருமளவில் படிக்க வருகின்றனர். ஆனால் இருக்கும் பிரச்சினை யெல்லாம் போதிய ஆசிரியர்களும் நல்ல கட்டிடமும் மற்ற வசதிகளும் இல்லை என்பதுதான்.

சர்க்காரோ, மக்களோ அல்லது இரண்டு பேருமாகச் சேர்ந்தோ படிப்பதற்கு உள்ள பலவிதமான இடையூறுகளையும் குறைகளையும் பல விதங்களிலும் நிவர்த்தி செய்துதான் வருகிறோம். இந்த வகையில் பாரதியார் சொன்னபடி ஏழைகளுக்குக் கண் திறந்துவிடும் பணி வேகமாகப் பரவியபடி உள்ளது. இதையும் ஏன் செய்ய வேண்டும் என்று யாராவது கேட்டால் அவர்களை என்ன சொல்வது?

**ஏழைக்குத் தெளிவு, தைரியம் ஏற்பட...**

இன்றைக்குப் படிப்பு மிகவும் அவசியமாகி விட்டது. வேலைக்குப் போவதற்காகவே படிக்கவேண்டும் என்ற காலம் மாறிவிட்டது. எந்தத் தொழில் செய்தாலும் சரி, அது சிறிய தொழிலாக இருந்தாலும் பெரிய அளவில் இருந்தாலும் கணக்கு வைத்து நடத்த வேண்டியிருக்கிறது. இதற்காக ஓர் அளவுக்காவது படிப்பு அவசியம்.

அத்துடன் படிப்பதால் ஏழை தெளிவு பெறுகிறான். படிக்காமல் இருக்கும் வரையில, நாம் ஏழை, நமக்கு மற்றவர்போல் வாழ வழியில்லை — அது முடியவும் முடியாது என்ற எண்ணந்தான் மேலோங்கியிருக்கும். படிக்கத் தொடங்கியவுடனே அறிவுக் கண் திறந்து கொள்கிறது. படித்துவிட்டால் உலகம் தெரிகிறது. மேலே உயர்ந்திருப்பவனைப் பார்த்து "நீ என்ன உயர்வு, நான் என்ன மட்டம்?" என்று கேட்கும் தெளிவும் தைரியமும் ஏற்பட்டு விடுமல்லவா? இந்த மாதிரி நிலைமை வரக் கூடாதே என்பதற்காகத்தான் சிலர் தர்மத்தின் பேரால் "ஏழைககுப் படிப்பு எதற்கு? சோறே இல்லையே" என்று உருக்கமாகப் பேசுகிறார்கள், குழப்புகிறார்கள்.

பொதுமக்கள் — அதிலும் குறிப்பாக ஏழை மக்கள் படிப்பின் அவசியத்தை நன்றாக உணர்ந்து விட்டார்கள். தங்கள் குழந்தைகளைப் படிக்க அனுப்பத் தவறுவதில்லை. இதில் கட்டாயம் செய்வதற்குள்ளாகவே, எல்லாக் குழந்தைகளும் தாமாகவே பள்ளிக்கூடம் வரும் நிலைமை ஏற்பட்டுள்ளது.

மதிய உணவு, பள்ளிச் சீரமைப்பு, சீருடை அளிப்பு ஆகிய திட்டங்கள், எவ்விதச் சங்கடமோ அல்லது சங்கோஜமோ இன்றித் தங்களுடைய குழந்தைகளை உடனடியாகப் பள்ளிக்கூடம் அனுப்ப ஏழைப் பெற்றோர்களுக்கு உதவுகின்றன. இத்திட்டங்களை மேலும் பரப்ப வேண்டும்.

# 6. பஞ்சாயத்துகளின் பங்கும் புதிய சமுதாயமும்

சிறிய கிராமங்களிலும், பெரிய ஊர்களிலும் பஞ்சாயத்துச் சபைகள் தொடர்ந்து ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. பல பஞ்சாயத்துகளும் சமுதாய நல அபிவிருத்தி வட்டார வேலைகளுடன் இணைக்கப்பட்டு பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் நிறுவப்பட்டுள்ளன.

புதிய சமுதாயம் ஏற்படுத்தும் வேலையில் பஞ்சாயத்துகளுக்கும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கும் பெரும் பொறுப்பு இருக்கிறது.

"யாரோ சிலர் பஞ்சாயத்து உறுப்பினர்களாக ஆகப்போகின்றனர். அப்போது ஊர்ப் பெரிய மனிதன் என்ற பட்டம் கிடைக்கும்; வசதி படைத்தவர்கள் பிரசிடெண்டாக வருவார்! இதில் நமக்கென்ன அக்கரை" என்று பொது மக்கள் ஏதோதானோவென்று அலட்சியமாக இருந்துவிடக் கூடாது.

புதிய பஞ்சாயத்துகளுக்குப் பொறுப்புகள் அதிகம் வழங்கப்பட்டுள்ளன. ஊருக்கு நன்மையான பல முக்கிய காரியங்களைக் கவனித்து நிறைவேற்றும் வேலையை நிரந்தரமாகக் கவனிக்கும் பொறுப்புள்ள ஸ்தாபனங்களாகவே பஞ்சாயத்துகள் உள்ளன. இதனை உணர்ந்து ஊர்க்காரியங்களைச் சரிவர அக்கறையோடு செய்து முடிக்கவேண்டும்.

பஞ்சாயத்துகளுக்கும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கும் நடைபெறும் தேர்தல்களில் பெரும்

பாலும் போட்டியில்லாமல் இருந்து வருவது மகிழ்ச்சிக் குரியதாகும். சில இடங்களில் போட்டி இருப்பதும் நல்லதுதான். ஆனால் ஊருக்கு நன்மை செய்வதில் நமக்குப் பங்கு வேண்டும் என்ற கருத்தில் அந்தப் போட்டி உணர்ச்சி இருக்க வேண்டும்.

தேர்தலோடு போட்டிகள் நின்று விட வேண்டும். வெற்றியும் தோல்வியும் மாறிமாறி வரும். வெற்றியைக் கண்டு இறுமாப்போ தோல்வியைக் கண்டு மனத் தளர்ச் சியோ யாருக்கும் ஏற்பட்டுவிடக் கூடாது. தேர்தல் முடிவுக்குப் பிறகு ஊர்க்காரியம் ஒழுங்காக நடப்பதில் எல்லோரும் ஒன்றுபட்டுக் கவனம் செலுத்துவதே முறை யாகும்.

வெகு சில இடங்களில் பஞ்சாயத்து தேர்தல் களால் ஊரே இரு கட்சிகளாகப் பிரிந்து சதா சண்டை யும் சச்சரவும் இருக்கும் நிலைமைகூடக் காணப்படுகிறது. இது நல்லதல்ல. " இந்த முறை நாம் தோற்றால்தான் என்ன ? வெற்றி பெற்றவர்கள் காரியம் செய்வதைக் கவனிப்போம், குறையிருந்தால் சுட்டிக் காட்டித் திருத் துவோம் ; நல்லது செய்தால் பாராட்டி ஒத்துழைப் போம் " என்ற மனப்பான்மை வேண்டும்.

இப்படிப்பட்ட மனப்பான்மை தேவை. தோல்வி யைச் சகித்துக்கொண்டு, நடப்பதை அமைதியாகவும் தெளிவாகவும் தைரியமாகவும் கவனிப்பது அவசியம். அப்போதுதான் நாம் மக்களுக்குப் பாடுபடும் பக்குவ நிலையில் எப்போதும் இருக்க முடியும். மன எரிச்சலோ, அமைதியின்மையோ வந்து விட்டால் நாம் பொதுத் தொண்டு செய்ய ஒரு சிறிதும் அருகதையில்லை என்று நம்மை நாமே சிறுமைப்படுத்திக் கொண்டு விட்டதாகத் தான் அர்த்தம். வேறு என்ன ?

பொதுத் தொண்டு என்பதும் பொது மக்களுக்காக வாழ்வது என்பதும் விளையாட்டு அல்ல. தனிப்பட்ட

வசதிகள் இருந்தால்தான் முடியும் என்பதும் அல்ல. மனம் இருந்தால். நிச்சயம் எப்படிப்பட்ட நிலையிலும் யாராலும் பொதுச் சேவை செய்ய முடியும். நம்மால் எவ்வளவு செய்ய முடியுமோ அதனை எந்த நிலையிலும் செய்யத் தயங்கக் கூடாது.

சில வசதிகளும் வாய்ப்புகளும் இருந்தால் நாம் பலகாரியங்களை ஒழுங்காகவும் பிரமாதமாகவும் செய்ய லாம் என்பது உண்மைதான். ஆனால் எப்படிப்பட்ட காரணத்தாலோ அத்தகைய வசதியும் வாய்ப்பும் இல்லா விட்டாலும், இனியும் கிடைக்கவே கிடைக்காது என்ற நிலைமையே கூட ஏற்பட்டு விட்டாலும் மனந்தளரவே கூடாது.

இதனால் நமக்கு ஒன்றும் கெட்டுப் போகவில்லை. ஆனால் நாம் மனம் தளர்ந்தால், நாம் செய்ய எண்ணும் நல்ல காரியங்களை அடியோடு மூட்டை கட்டி வைத்து விடும் நிலைமை ஏற்பட்டுவிடக் கூடும். எப்படியும் செய் வோம்; நம்மால் முடியாவிட்டாலும், மற்றவர் மூலமாவது செய்தே தீருவோம். நல்ல சந்தர்ப்பம் ஏற்படும் வரை முடிந்ததைச் செய்வோம். முடிந்தால் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொள்வோம். சந்தர்ப்பம் கிடைக்க வில்லையே என்று சலித்துக்கொள்வது ஆண்மை அல்ல. இதனை உணர்ந்தால், பஞ்சாயத்துக்களிலும் சரி, வேறு எந்தப் பொதுக் காரியம் அல்லது குடும்பக் காரியங் களிலும் சரி, நமக்குச் சலிப்பே வராது. அதோடு நம்மால் எதற்கும் கெடுதலோ, தடையோ, சங்கடமோ ஏற்படாது.

# 7. பஞ்சாயத்தில் அதிகாரிகள் பொறுப்பு

பஞ்சாயத்து யூனியன்களுக்கு உதவியாக ஜில்லா கலெக்டர்களும், மற்ற அதிகாரிகளும் இருந்து கவனிப்பார்கள். அவர்கள் மிகவும் கவனத்தில் வைக்க வேண்டியவை அநேகம் உள்ளன.

பஞ்சாயத்தைப் புதிய முறையில் திருத்தி அமைத்ததற்குப் பின்னுல் இப்பொழுது செயல்படுத்த ஆரம்பித்திருக்கிறேம். இதில் பல சிரமங்கள் இயற்கையாகவே, ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கும். ஏற்கனவே, வெகு நாட்களாக பல கிராமங்களில் பஞ்சாயத்து இருக்கிறது. ஜில்லா போர்டு, தாலூகா போர்டு அங்கத்தினர்களாக இருந்து அனுபவம் பெற்றவர்கள் பலர், கிராமங்களில் இருக்கிறார்கள். இருந்தாலும், பெரும் அளவில் பஞ்சாயத்தை இப்பொழுதுதான் விரிவு படுத்தியிருக்கிறேம். ஏற்கனவே பஞ்சாயத்து இருந்த கிராமங்களுக்கும், புதிதாகப் பஞ்சாயத்து ஏற்படுத்திய கிராமங்களுக்கும் உள்ள வித்தியாசம் உங்களுக்குத் தெரிந்திருக்கும். **பழைய பஞ்சாயத்து ஏற்கனவே இருந்த இடங்களில், அவ்வளவு ஊக்கமும் ஆர்வமும் இருப்பதாக இல்லை. புதிதாக இப்பொழுதுதான் 'நமதுகிராமத்திற்கு வேண்டிய எல்லா நல்ல காரியங்களையும் பஞ்சாயத்து மூலம் செய்ய முடியும்' என்ற ஆர்வமும் உணர்ச்சியும் வந்திருக்கிறது.** அதை நாம் வரவேற்க வேண்டும். அந்த முயற்சியை நல்ல முறையில் நாம் பயன்படுத்துவோமேயானுல், நாம் நினைக்கக் கூடிய

காரியங்களை நிறைவேற்றிக் கொள்ள வசதியாக இருக்கும்.

**ஒற்றுமையுடன் செயலாற்ற......**

கூடுமான வரையில் பஞ்சாயத்துகளில் அதிகமாகத் தகராறுகள் இருக்காது. தகராறே இல்லாமல் இருக்கவும் முடியாது. பஞ்சாயத்து அங்கத்தினர்கள் எல்லோருமே ஒற்றுமையாக, ஒரு மனதோடு இருந்தால் நல்ல வேலைகளைச் செய்ய உதவியாக இருக்கும். அந்தச் சூழ்நிலையை நீங்கள் ஏற்படுத்த வேண்டும். நல்ல ஆலோசனைகளை அவர்களுக்குச் சொல்லி, அவர்களை உற்சாகப்படுத்தி, ஊக்குவிக்க வேண்டும். ஊருக்குத் தக்கபடி ஆலோசனை கூறுவது மிகவும் அவசியமானது. ஒரு கிராமம் என்று எடுத்துக் கொண்டால் அங்கு பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்ட் இருப்பார், கிராம முன்சீப் இருப்பார், கூட்டுறவுச் சங்க பிரசிடென்ட், செகரட்டரி இருப்பார்கள். இவர்கள் ஒருவருக்கொருவர் ஒற்றுமையாக இருக்க வேண்டும். அப்படியில்லாமல் ஒருவருக் கொருவர் சண்டைபோட ஆரம்பித்துவிட்டால், அந்த ஊரில் ஒன்றும் நடக்காது. சாதாரணமாக 'பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்டுக்குத்தான் அந்தஸ்து வந்துவிட்டது, நமக்குக் கௌரவம் இருக்காது' என்று கிராம முன்சீப்புகள் நினைக்கிறார்கள். 'ஒரு ஊருக்கு யார் போனாலும் பஞ்சாயத்து பிரசிடெண்ட் யார் என்று தான் முதலில் கேட்கிறார்கள். அதனால் நம்மைப்பற்றி யாரும் கவலைப்படாமல் விட்டுவிடுவார்களோ' என்ற மனப்பான்மை அவர்களுக்கு வரும். அந்த மனப்பான்மை வராமல் பார்த்துக்கொள்ள வேண்டும். 'கிராம முனிசீப்புகளுக்கு உள்ள கௌரவமும் அந்தஸ்தும் குறையவில்லை; அதோடு கிராமப் பஞ்சாயத்தை இணைத்திருக்கிறோம்' என்ற மனப்பான்மை அவர்களுக்கு உண்டாகும்படி நீங்கள் செய்ய வேண்டும்.

அப்பொழுதுதான் தகராறு இல்லாமல் இருக்கும். மூன்று பேர்களையும் சேர்ந்து கலந்து எல்லாக் காரியங்களையும் செய்யச் சொல்ல வேண்டும்.

**விவசாய உற்பத்தி பெருக......**

விவசாய உற்பத்தி பெருக வேண்டுமென்று ஆசைப்படுகிறோம். நாம் என்னதான் அதற்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்று நினைத்தாலுங்கூட, பஞ்சாயத்துக்காரர்களுக்கோ, கிராம மக்களுக்கோ அந்த எண்ணம் ஏற்படும்படி செய்ய வேண்டும். பள்ளிக்கூடம், ரோடு, விளக்கு, கிணறு வேண்டுமென்று சொல்லும் பொழுது இருக்கிற உற்சாகம் அவர்களுக்கு இதில் இல்லை. தண்ணீருக்கு ஏற்பாடு செய்ய வேண்டும், ஏரிக்குத் தண்ணீர் வேண்டும், குளத்திற்குத் தண்ணீர் வேண்டுமென்று சொல்வார்கள். எங்கிருந்து தண்ணீரைக் கொண்டுவருவது? மழை பெய்தால்தான் தண்ணீர் கிடைக்கும். இதெல்லாம் நாம் செய்யக்கூடியதாக இருந்தால் பரவாயில்லை. செய்துவிடலாம். இருந்தாலும் நாம் அவசரமாகச் செய்யவேண்டிய பல காரியங்கள் காலதாமதமாகிக்கொண்டிருக்கின்றன. அவற்றையெல்லாம் முதலில் கவனிக்கவேண்டும்.

**காசு கிடைக்க வழி என்ன?**

அவர்களுடைய கோரிக்கைகளில் நம்மால் செய்யக்கூடியதைக் காலதாமதமில்லாமல் செய்து விட்டால்தான் அவர்களுக்கு நம்மீது நம்பிக்கை பிறக்கும். நாம் சொல்வதில் உற்சாகம் ஏற்படும். அப்படிக் காலதாமதமில்லாமல் காரியங்களைச் செய்வதற்கு என்ன வழி என்று நாம் யோசிக்க வேண்டும். அப்பொழுது தான் விவசாயத்தில் அவர்களுக்கு உற்சாகத்தை நாம் ஏற்படுத்த முடியும். நாம் போடுகிற திட்டங்கள் எல்லாம் எதற்காக? அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்

வதற்காக. அதற்கு என்ன வழி? கிராமத்தைப பொறுத்த வரையில் விவசாயந்தான் முக்கியமானது. அதோடுகூட, அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயர வேண்டுமென்ருல், சிறு கைத்தொழில்களை ஏற்படுத்தி அவர்கள் வருவாய்க்கு வழி செய்ய வேண்டும். எந்தத் திட்டம் போட்டாலும், காரியங்கள் செய்தாலும் அதில் அவர்களுக்கு நாலு காசு கிடைக்கிறது என்ருல்தான் ஒரு உற்சாகம் அவர்கள் மனத்தில் ஏற்படும். அதற்கு என்ன வழி என்பதை நீங்கள் யோசிக்க வேண்டும், இது மிக வும் அவசியமானது.

எவ்வளவு வேலை வந்தாலும் அதைச் செய்ய வேண்டு மென்ற மனப்பான்மை இருந்தால்தான், நமக்கு வேலை குறைவாகத் தெரியும். அப்படியில்லை என்ருல் எவ்வளவு வேலை குறைவாக இருந்தாலும் அதிகமாகத் தான் தோன்றும். எல்லாம் நம் மனத்தைப் பொறுத் தது தான்.

**ஊக்கத்துடன் வேலை செய்வோம்**

பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் சரியாக நடக்க நாம் சிரத்தை எடுத்துக்கொள்ளவேண்டுமென்ற ஊக்கத் தோடு. உணர்ச்சியோடு நீங்கள் வேலை செய்தால்தான் அதைச் சரியாகச் செய்யமுடியும். கிராமத்திலுள்ளவர் கள் எதற்கும் யோசனை கேட்க உங்களிடம்தான் வரு வார்கள். நாம் அவர்களுக்குச் சொல்லக் கூடிய யோசனை கள் அவர்களை உற்சாகப்படுத்தக் கூடியவையாக இருக்க வேண்டும். அவர்கள் செய்யக்கூடிய வேலைகளுக்கு நாம் துணையாக இருக்கிருேம் என்ற உணர்ச்சி அவர்களுக்கு ஏற்படும்படி நடந்துகொள்ளவேண்டும். நாமும் அவர் களுக்கு வேண்டியதைச் செய்கிருேம் என்ற மனப் பான்மை அவர்களிடத்தில் இருந்தால்தான் ஒற்றுமை ஏற்படும். எல்லாக் காரியங்களும் நன்ருக நடக்கும்.

அந்த ஊரில் விவசாயம் நன்ருக நடக்கிறது; காரணம் அங்கு தகராறு இல்லே என்று சொல்லக்கூடிய கிராமங் களை நீங்கள் பலருக்குத் தெரியும்படி செய்யவேண்டும். அப்பொழுதுதான் எங்கும் சண்டை சச்சரவு இல்லாமல் இருப்பதற்கு உதவியாக இருக்கும். சண்டை என்ருல் என்ன? ஊரே கூடியா சண்டை போடுகிருர்கள்? ஏதோ சில பெரியமனிதர்கள் செல்வாக்குக்காக, கௌரவத் திற்காக போடுவதுதான் அங்கு சண்டையாக இருக்கும். ஒற்றுமையாக இருக்கக்கூடிய ஊர்களில் நம் கவனத்தை அதிகமாகச் செலுத்தி மற்ற கிராமங்கள் அதைப் பார்த் துத் திருந்தும் அளவிற்கு நாம் அதைச் செய்ய முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். சிறிய காரியங்களை உடனே செய்யவேண்டும். அவையெல்லாம் பல இடங்களில் தாமதமாகி வருகின்றன. உடனே செய்ய வேண்டிய காரியங்களையெல்லாம் கவனித்து நிறைவேற்ற வேண்டும். நாம் சிரத்தை எடுத்துக்கொண்டு அதை முடித்துக் கொடுக்கிருேம் என்ற மனப்பான்மை இருந்தால், இதைப் போன்று எல்லாக் காரியங்களையும் நல்ல முறை யில் நடத்தலாம் என்று நினைக்கிறேன்.

# 8. அமைதியே ஆக்க வேலைக்கு ஆதாரம்

மக்கள் நலனுக்காகச் செய்ய வேண்டிய காரியங்கள் ஏராளமாகத்தான் உள்ளன. எல்லாத் தேவைகளையும் உடனடியாகப் பூர்த்தி செய்துவிட முடியுமா? இப்படிக் கேட்பதால், பிரச்சினைக்குத் தீர்வு காண்பதைத் தள்ளிப் போட இது ஒரு வழி என்று கேலி கூடச் செய்யலாம். ஆனால் உண்மை இதுதானே!

சாதிக்கவே முடியாது, செய்யவே முடியாது என்று எந்த நல்ல காரியத்தை ஒத்திப் போடுகிறோம்? அல்லது தட்டிக் கழித்துப் பொறுப்பிலிருந்து நழுவுகிறோம்? சொல்லுங்கள்!

திட்டமிட்டு, முன்னேற்றத்திற்கான காரியங்களைச் செய்து வருகிறோம். திட்டங்கள் நமக்காகத்தான். நம்முடைய வாழ்வு இதனால் வளம் பெறும் என்ற நம்பிக்கையையும் அதன் மூலம் மக்களின் ஒத்துழைப்பையும் பெறுவது முதல் வேலையாக உள்ளது.

மக்களுக்காகப் போடப்படும் திட்டங்களைத் தெரிந்து கொள்வதில் அனைவரும் அக்கறை காட்டத் தவறக்கூடாது. அடிப்படையான முன்னேற்றத் திட்டங்களைச் செயல் படுத்துவதில் கட்சிப் பூசல்களோ, மற்ற ஜாதி, மதபேதங்களோ, மொழிச் சிக்கல்களோ குறுக்கிடாதபடி கவனிப்பது முக்கியமாகிறது.

**பேச்சே பெரியதாக**

தர்மம் பேசிக்கொண்டே, புதிய திட்டம் வேண்டாம் என்று பேசும் போக்கும், நாட்டைப் பிரித்து

விட்டால் எல்லாம் தீரும் என்று தம்பட்டம் அடிப்பதும், தலைகீழ்ப் புரட்சியே நல்வாழ்வுக்கு வழி என்பதும் அவரவர் கட்சியின் வளர்ச்சிக்கும் நடமாட்டத்திற்கும் உதவலாம். ஆனால் இப்பேச்சே பெரிதாகி, அடிப்படை முன்னேற்றத்தையே தடைப்படுத்தும் நிலைமை ஏற்பட்டு விடக் கூடாது. இதனைப் பற்றிக் கட்சிகளும் சரி, பொதுமக்களும் சரி கவனித்து நடப்பது அவசியமாகும்,

எந்தக் கட்சியானாலும் சரி, மக்கள் வாழவேண்டும். என்றுதான் சொல்லுகின்றன. ஆனால் எப்படி மக்களை வாழ்விப்பது? எந்த வழி வகுத்து இதை நடத்துவது என்பதில் கருத்து வேறுபாடும், மாறுபாடும் இருக்கலாம். இது கூட இல்லை என்றால தனித்தனிக் கட்சி வைத்திருப்பதற்கு அர்த்தமே இல்லாமல் போய் விடாதா?

சில கட்சிகளது கருத்துக்கு மக்கள் ஆதரவு அதிகம் இல்லாமல், ஆட்சிப் பீடத்தில் அமர முடியாமல் போகலாம். இது ஜனநாயகத்தில் சாதாரண சம்பவமாகும். ஆனால் ஆளும் சந்தர்ப்பம் ஏற்படவில்லையே என்பதால் சலிப்பும், சஞ்சலமும் ஏற்பட்டு, இதுவே பெரிதாகி ஆள்பவர் செய்வதைக் கண் மூடித்தனமாகக் குறை கூறுவது எக்கட்சிக்கும் நல்லதே அல்ல.

## அமைதிக்கு அனைவரும் பொறுப்பு

எத்தனை கட்சிகள்—கொள்கைகள்—கோட்பாடுகள் வேண்டுமானாலும் இருக்கலாம். நாட்டில் அமைதி நிலவ வேண்டும். இது மிகவும் அவசியம். அமைதியான சூழ்நிலையில்தான் ஆக்கவேலைகளில் ஆள்வோர் மட்டுமல்ல, மக்களும் தகுந்த கவனம் செலுத்த முடியும். கட்சிகள் காரணமாகவும், அவற்றிற்கிடையில் உள்ள கொள்கை மாறுபாடு, வேறுபாடு காரணமாகவும் நாட்டின் பொது அமைதி குலையும் போக்கு ஒரு சிறிதும்

ஏற்படக் கூடாது. அமைதி குலைந்தால் மக்கள் வாழ்வே குலைந்து போகும்; தேசத்தின் செல்வங்கள் தான் பாழாகும்; மக்களது நிம்மதிதான் கெட்டுப்போகும். நம்முடைய சக்திதான் வீணாகும்; விரயமாகும். இந்த நிலைமை ஏற்படவே கூடாது. எந்தச் சிக்கலுக்கும் ஜனநாயக முறையில், அமைதியான முறையில் தீர்வு காண முடியும். அமைதியைக் காப்பதில் நம் அனைவருக்குமே பொறுப்பு உண்டு. கட்சிக்குக் கட்சி இதில் வித்தியாசம் இல்லை. ஜாதி, மதம், மொழி வேற்றுமை கூட இதற்கு முன் நிற்கக் கூடாது.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சி நடக்கும் இந்த நேரத்தில், அமைதியைக் குலைத்துத்தான் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளவேண்டும் என்ற மனப்பான்மை வேண்டுமா?

படித்தவர்கள், வாழ்க்கையில் வசதி படைத்தவர்கள், நடுத்தர மக்கள், உத்தியோகத்திலும், தொழிலிலும் இருப்பவர்கள்—பொது விஷயங்களைக் கவனித்து அதைப்பற்றிக் கொஞ்ச நேரமாவது பேச—வாதப் பிரதிவாதம் செய்யும் வாய்ப்புள்ளவர்கள் அனைவருக்கும் நாட்டின் "அமைதியைக் காப்போம்" என்ற உணர்ச்சியும் உறுதியும் ஏற்பட்டு விட்டால், சாதாரண மக்களுக்கு எந்தவிதமான குழப்பமும் ஏற்படவே ஏற்படாது.

புதிய சமுதாயம், சர்வோதய சமுதாயம், சமதர்ம சமுதாயம் அமைப்பதில் அனைவருக்கும் பொறுப்புள்ளது. யாருக்குப் பொறுப்பு என்று கணக்குப் பார்ப்பது அர்த்தமற்றது—அவசியமற்றது—தேவையற்றது. எல்லோருக்கும் கூட்டுப் பொறுப்பு உண்டு என்ற பொறுப்புணர்ச்சி தேவை.

மக்கள் வாழ்வில் சாந்தியும் இன்பமும் நிலவ வேண்டும்; பொறுப்புணர்ச்சி உடையவர்களின் லட்சியமும் வேலைத்திட்டமும் இதுவாகத்தான் இருக்க வேண்டும். இந்த உணர்வுடன் காந்திஜி கண்ட புதிய சமுதாயத்தை அமைக்க உறுதி கொள்வோம்; அதற்கான முயற்சிகளில் உற்சாகத்துடன் ஈடுபடுவோம்.

# 9. நமக்குக் கிடைத்த நல்வாய்ப்பு

தற்கால உலகில் மிருக உணர்ச்சி படைத்த சில மனிதர்களின் செயல்களை வரையறை செய்யாமல் அப்படியே, அவர்களைத் தன்னிச்சையாக உலவ விட்டுவிட முடியுமா? அப்பாவியான ஏழை எளிய மக்களை, வசதி படைத்தவர்களும் கல்மனம் படைத்தவரும், கசக்கிப் பிழிந்து விடாமல் தடுக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். பெரிய முதலாளித்துவ நாடுகளில் கூடக் கட்டுப்பாடற்ற தொழில் முறையும், சுதந்திரமான வியாபாரமும் அனுமதிக்கப்படாமல், ஓரளவுக்கு அவை ஒரு கட்டு திட்டத்திற்குள்ளாகத்தானே வைக்கப்பட்டிருக்கின்றன!

வசதி படைத்த பெரிய முதலாளிகள் ஏழை எளிய மக்களை வாட்டி வதைத்து அவர்களுடைய வாழ்வுக்கு உலை வைக்காமல் தடுத்து நிறுத்தத்தான் நாம் திட்டங்கள் தீட்டி செயலாற்றுகிறோம். நாம் திட்டங்கள் போடுவதே இதற்காகத்தான். நமது நாட்டைப் பொறுத்த வரையில், தனியார் துறையானது கட்டுப்பாடற்ற முறையில் தன்னிச்சையாக தலைவிரித்தாட நாம் அனுமதிக்க முடியாது. அக்கிரமமான வழிகளில் பலத்தையும் பணத்தையும் பெருக்கிக்கொண்ட பெரிய முலதனக்காரர்கள், அப்பாவி ஏழை எளிய மக்களின் வாழ்வை நாசமாக்குவதை, கேவலமான வழிகளில் அவர்களைக் கொள்ளையடித்துத் தங்களுடைய சுகபோக வாழ்க்கைக்கு மெருகு ஏற்றிக்கொள்வதை, எந்தக் காலத்திலும் நாம் அனுமதிக்க முடியுமா என்ன? முடியாது.

## அறிவும் ஆற்றலும் பரம்பரைச் சொத்தல்ல

இப்படிச் சொல்வதினுல் தனியார் துறையும் தனிப் பட்ட முறையில் செயலாற்றும் தன்மையும் ஒரேயடியாக ஒழித்துக்கட்டப்பட்டு விடும் என்று அர்த்தமல்ல. அவை நிச்சயமாக ஆதரிக்கப்படும். ஊக்கமும் உற்சாகமும் எந்த வகையிலும் குறையாத வகையில் அந்தத் துறையானது செயலாற்ற என்றும் அனுமதிக்கப்படும். புத்திக் கூர்மை படைத்தவர்கள் தங்களுடைய மேதா விலாசத்தைப் பயன்படுத்தி, சமுதாயத்துறையில் முன்னேறுவதை நாம் ஒரேயடியாகத் தடுத்து நிறுத்தி விட முடியாது. அது நம்முடைய நோக்கமுமல்ல. பார்க்கப்போனுல், உடல் வலிமைமட்டுமே அதிகாரத்தைக் கவர அடிப்படை அல்ல. அறிவும் அந்த அளவுக்கு முக்கியமானது தான். அறிவானது சில பேரிடம் அதிகமாக இருக்கலாம். சில பேரிடம் குறைவாக இருக்கலாம். அறிவு பரம்பரைச் சொத்து அல்ல. ஆனுல், பலவீனமானவர்களுக்குச் சரி சமத்துவமான வசதிகளைச் செய்து தருவதின் மூலம் அவர்களையும் சமுதாயத்தில் பலம் பொருந்தியவர்களாக வும் அறிவாளிகளாகவும் உலவ விட முடியும். ஆகவே தன்னிச்சையாக, இயற்கையாக உலகில் எதையும் நடக்க அனுமதித்து விடுவோமேயானுல் பலம் பொருந் தியவர்கள், ஏமாற்றுக்காரர்கள் ஆகியவர்களின் பாடு வேட்டைதான்! அவர்கள் வெகு சுலபமாக பலவீனர் களை, அப்பாவிகளை ஏமாற்றி, அவர்களைப் பெருத்த அளவில் கொள்ளையடித்து தங்களுடைய சுகபோக வாழ்க்கையைப் பெருக்கிக் கொள்ளத் தயங்க மாட்டார் கள். இந்தக் கொள்கை கடைப்பிடிக்கப்பட்டால் பணக்காரன் இன்னும் பணக்காரன் ஆவான். ஏழை இன்னும் ஏழையாகத்தான் காட்சியளிப்பான். ஆகவே, பெரிய முதலாளித்துவ நாடுகளில் கூட அரசாங்கங்கள்

இப்படிபட்ட பலம் பொருந்தியவர்களுடைய வசதிகளைக் குறைத்து, ஓரளவு கட்டுப்பாடுகளைப் புகுத்தி, அவர்கள் சமுதாயத்தை உறிஞ்சும் அட்டைகளாக மாருமல் பார்த்துக்கொள்கின்றன.

**வாழ்வும் தாழ்வும்**

மனிதனின் மிருக உணர்ச்சியானது வெறியாக மாறி மனிதனுடைய மனத்தை ஆட்டிப் படைக்கும்படியான நிலையில் விட்டு வைக்கக்கூடாது. இந்த மிருக உணர்ச்சி மெள்ள மெள்ளவாவது நம்மிடமிருந்து அடியோடு ஒழிக்கப்படவேண்டும். ஏனென்றால், இதனுல் சுயநல மனப் பான்மையும், தன்னல உணர்ச்சியும், பிறர் உழைப்பைச் சுரண்டி வாழ்கிற கேவல மனப் பண்புந் தானே மனிதர்களிடையே வளருகின்றன.

இந்த நாட்டின் மக்களது வாழ்வையும் தாழ்வையும் நிர்ணயம் செய்வதுதான், நாம் போடுகின்ற திட்டங்கள். நாட்டின் சக்திகள், மக்களின் முன்னேற்றத்திற்காக மேலும் மேலும் கிடைக்கும் வசதிகள், இவைகளைத் தீரப் பரிசீலனை செய்து, அதன் பேரில் இந்தத் திட்டங்களைப் போடுகிறோம்.

எல்லா மக்களையும் சரி நிகர் சமானமாக ஆக்கிவிட முடியாது என்பது உண்மைதான். ஆனுல், அவர்களுக்கு சரிசமானமான வசதிகளாவது செய்து தரப்பட வேண்டாமா? நமது நாட்டில் கிராமப் புறங்களில் உள்ள பல் லாயிரக் கணக்கான மக்களுக்குப் போதிய கல்வி வசதி கிடையாது. இந்தப் பழம் பெரும் நோய்க்கு தக்க மருந்தை நாம் கண்டுபிடித்து வருகிறோம். பழங்காலத்தில் உபயோகித்த மருந்து இந்த காலத்திற்குப் பயன்படாது. இன்றைய உலகம் இருக்கின்ற நிலை, நமது நாட்டின் தற்போதைய நிலை, இவைகளை மனதிலேத் கொண்டு,

உணர்ந்து பார்த்து நாம் செயலாற்ற வேண்டும். பழங் கால நடைமுறைகள் இப்பொழுது பயன் படாமல் போக லாம். நமக்கு ஒத்த முறைகளில் செயலாற்ற வேண்டும்.

**சமதர்மம் என்றால் என்ன ?**

தொழில் துறையில் ஏற்பட்ட புரட்சியும் வளர்ச்சி யும் பெற்றெடுத்த குழந்தைதானே சமதர்மம். புதிதாக செல்வமானது உருவாக்கப் படுகிறபொழுது, அதைப் பங்குபோடுகிற பிரச்சினையும் கூடவே எழுகிறது. தொழில் புரட்சிக்கும் வளர்ச்சிக்கும் முன்னால் சாதாரண மக்கள் தங்களுடைய தலைவிதியின் பயன் என்று எண்ணி பொறுமையோடு முணுமுணுக்காமல் காலத்தைக் கடத்தி வந்தார்கள். ஆனால் இப்போதையநிலை அப்படியா? மனித சமுதாயத்திலே உருவாகின்ற எண்ணங்களிலே, கருத் துக்களிலே, ஒரு புரட்சித் தன்மை ஏற்பட்டிருக்கிறதா இல்லையா?

புரட்சிகரமான மாறுதல், தினம் தினம் ஏற்பட்டுக் கொண்டே வருகிற காலத்தில் நாம் வாழ்ந்து கொண்டு வருகிறோம். உலகமே ஒரு பெரிய மாறுதலை அடைந்து வருகிறது. எல்லாத் துறைகளிலும் புதிய கருத்துக்கள், புதிய செயல்கள் தோன்றியிருக்கின்றன. ஆகவே நாம் எடுத்துக்கொள்கின்ற எந்தப் பிரச்சினையையும் இந்தக் கண்ணோட்டத்துடன்தான் நாம் கவனிக்க வேண்டும். சமதர்மம் என்றால் ஏழ்மையைச் சமமாகப் பகிர்ந்து கொடுப்பது என்று அர்த்தமல்ல. மேலும் மேலும் உற் பத்தி செய்தல், அதே சமயத்தில் அதனால் ஏற்படுகின்ற செல்வம் ஒரு சிலருடைய இரும்புப் பெட்டிகளில் சென்று ஐக்கியமாகி விடாமல் பார்த்துக் கொள்ளுதல், இவை தான் சமதர்மத்தின் நோக்கங்கள்.

நமது நாடு இன்னும் வறுமையில் ஆழ்ந்திருக்கிறது. நாம் இந்த வறுமைப்பேயை ஓட்டியாகவேண்டும். இந்த ஏழ்மைப்பிடியிலிருந்து நம்மை நாமே மீட்டுக் கொண்டாக வேண்டும்.

**சுபீட்சம் தாண்டவமாட...**

நாட்டைப் பிடித்துக்கொண்டிருக்கும் வறுமையைப் போக்க எடுக்கப்படும் வேலைத்திட்டங்களில் மிகவும் முக்கியமானதுதான் பெரிய பெரிய தொழில்களை ஏற் படுத்துவது. அமெரிக்காவிலும், ருஷ்யாவிலும் சுபீட்சம் தாண்டவமாடக் காரணம் பெரிய பெரிய யந்திரங்கள் உருவாக்கப் பட்டதும் அவைகளைக் கையாளுகின்ற திறமை அவர்களிடம் இருப்பதுந்தான். ஒரே அடியில் இந்த அளவுக்கு இல்லாவிட்டாலும் குறிப்பிட்ட—தேவை யான அளவுக்காவது நமக்கு இந்த வசதியும் திறமையும் வேண்டும்.

நமது நாட்டில் பெரிய பெரிய தொழில்களை ஏற்படுத் துவதன் மூலம்தான் நம் மக்களை கைதூக்கி விடமுடியும். இப்படிப்பட்ட பெரிய தொழில்களை நடத்த நம் மக்களுக் குப் போதிய பயிற்சியளித்தாக வேண்டும். இந்தியாவில் உள்ள என்ஜினீயர்கள் போதாது; இவர்களின் தொகை பெருக வேண்டும். இன்றைய பெரிய தொழில் திட்ட மூலம்பலன் கிடைக்க நாளாகும்.

தொழில் துறையில் மட்டுமல்ல. விவசாயத்துறை யிலும் மகத்தான முன்னேற்றங்கள் ஏற்பட வேண்டும். பார்க்கப் போனால், விவசாய அபிவிருத்திதான் மிகவும் முக்கியம். விவசாய வளம் கொழிக்கும் நாட்டில் தான் பெருந்தொழில்கள் பெருகுவது சுலபம். உடனடிப் பல னும் கிடைக்கும்.

கீழ்க்கண்ட நான்கு பொருள்கள் மிகவும் அவசர மாகத் தேவை:—போதிய எஃகு, மின்சாரம் போன்ற

சக்திகள், பெரும் யந்திரங்கள், போதிய பயிற்சியளிக்கப்பட்ட தொழில் பகுதியினர். தொழில் துறையில் ஒரு புது மலர்ச்சியைக் காண நாம் மகத்தான சாதனை புரிந்தாக வேண்டியிருக்கிறது. இது ஒரு புரட்சிகரமான விஷயம். கால ஓட்டத்தோடு சமுதாயம் மாறிக்கொண்டே வரவேண்டும். இதை நாம் மறந்து விடுவோமேயானால், கடைசியில், மக்கள் சக்தியானது கட்டுமீறிப் பீறிட்டுக் கொண்டு கிளம்பிப் புரட்சியில் கொண்டுவந்து விட்டு விடும். திட்டம் கூடாது என்பதும் மக்களைக் குழப்புவதும் இதில்தானே கொண்டு விடும்? யோசியுங்கள்.

## தோளோடு தோள் நின்று செயலாற்றுவோம்

சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மகத்தான மாறுதலை நம் நாடு இப்பொழுது அடைந்து வருகிறது. இந்த நாட்டை ஒரு லட்சியத் திருநாடாக மாற்றியமைக்கும் மகத்தான பணியில் நாமும் நம்முடைய பங்கைச் செய்கின்ற வாய்ப்பு நமக்குக் கிடைத்திருப்பது நாம் செய்த அதிர்ஷ்டமேயாகும். எதிர் காலத்திலே சரித்திராசிரியர்கள் இந்தியாவின் மகத்தான சாதனையைப்பற்றிப் பக்கம் பக்கமாக எழுதிப் புகழ் மாலை சூட்டப் போகிறார்கள். ஆகவே, இந்த மிக முக்கியமான கட்டத்தில் சிறு சிறு பொல்லாங்குகளும் பூசல்களும் மனக்கிலேசங்களும் நம்முடைய வேகத்தைத் தடுத்து நிறுத்தி விடாமல் நாம் பார்த்துக்கொள்ள வேண்டும்.

மகத்தான எதிர்கால வாழ்வை உருவாக்கும் திருப்பணியிலே தோளோடு தோள் நின்று முன்னேற்றப் பாதையில் ஏறு நடைபோடும் நாற்பது கோடி மக்களிலே நானும் ஒருவன் என்ற பெருமிதமும் உள்ளுணர்வும் ஒவ்வொரு பிரஜையின் இதயத்தினுள்ளும் ஏற்படும்படியான ஒரு நல்ல சூழ் நிலையை நாம் உருவாக்க வேண்டும்.

சிறு சிறு பூசல்கள், தேவையற்ற விதண்டா விவாதங்கள் பலனளிக்காது. மகாத்மா காந்தி அடிகள் சொன்ன மாதிரி, எவ்விதமான நயவஞ்சகமோ களங்கமோ இல்லாமல், எந்தப் பிரச்சினையையும் திறந்த மனத்துடன் நாம் சீர்தூக்கிப் பார்த்து செயலாற்ற வேண்டும். புதிய சமுதாயம் தானே அமைந்துவிடும்.